# அருளோசை

திருவள்ளுவர்
ஆண்டு 2003
ஐப்பசி
1972 அக்டோபர்



திருமுருகன்

கணேசன்

## தமிழ்நாடு தெய்விகப் பேரவை

சென்னை-14

# "அருளோசை"

—:0:—

## வினு விடைப் பகுதி—செப்டம்பர்-72
## பரிசு பெற்றவர்கள்

முதல் பரிசு: ப. சுப்பிரமணியம், தூத்துக்குடி-1. சந்தா எண் 465

இரண்டாம் பரிசு: சொ. காந்திமதியம்மாள், பாளையங்கோட்டை சந்தா எண் 791.

மூன்றும் பரிசு: சோ. கிருஷ்ணமூர்த்தி, திருச்சி-2. சந்தா எண் 1025

நான்காம் பரிசு: கொ. அ. அப்பாய் செட்டியார், அரிசிப்பாளையம் சந்தா எண் 740.

---

உ




# இந்து இளைஞர் மன்றம்

(தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் சார்பு அமைப்பு)

21-10-72 & 22-10-72 ஆகிய தேதிகளில்

## சென்னை மாவட்ட மாநாடு

மயிலாப்பூர், லஸ்சர்ச் ரோடு,

சீனிவாச சாஸ்திரி ஹாலில்

கவியரங்கம், கருத்தரங்கம், பட்டிமன்றம், விஞடி விஞ விடை ஆகியவற்றுடன் நடைபெறும்.

ஆன்றோர் பலரும், தொண்டார்வமிக்க இளைஞர் பலரும் கலந்து கொள்கிறார்கள்

அனைவரும் வருக

விழாக் குழுவினர்

9, மகாராஜா சூரியராவ் சாலை
சென்னை-18

சென்னை மாவட்ட இந்து
இளைஞர் மன்றம்

---






(திங்களிதழ்)

ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.



| மணி 1 | பரிதாபி ஐப்பசி<br>1972 அக்டோபர் | ஓசை 4 |
| --- | --- | --- |



அருளோசை அன்பர்களுக்கு, வணக்கம்

இந்த இதழில் இரண்டு புதிய பகுதிகள் ஆரம்பிக்கப் பெற்றுள்ளன. ஒன்று, நமது வணக்கத்திற்குரிய அருள்நெறித்தந்தை அவர்கள் எழுதும் "வள்ளுவர் வழியில். . ." என்ற தொடர்கட்டுரை. மற்றொன்று... உரைகல்.... என்ற பகுதி. இதில் அருளோசையைப் பற்றி அன்பர்கள் எழுதிய கடிதங்கள் இடம் பெறுகின்றன. இப்பகுதிக்குத் தங்கள் கருத்துக்களைச் சுருக்கமாக எழுதி அனுப்பலாம்.

தவிர, அருளோசைக்கு கடிதம் எழுதும் போது தவருமல் முகவரியில், தாங்கள் வினவிடைப் பகுதி தொடர்பாக எழுதினல் "வினவிடைப் பகுதி" யென்றும், "உரைகல்" பகுதிக்கு எழுதினல் "உரைகல்" என்றும் எழுத வேண்டுகிறேன். எல்லாவற்றிலும் தங்கள் சந்தா எண்ணைத் தவருது குறிப்பிடவும்.

மேலும், பேரவை வெளியீடுகள் தொடர்பாகவோ, சங்கங்கள் தொடர்பாகவோ எழுத வேண்டும் எனில், ஒரு தனித்தாளில் எழுதி, அந்த உறைக்குள்ளேயே வைத்து அனுப்பினல், உடன் நடவடிக்கை எடுக்கத் துணையாக இருக்கும்.

அ. நாராயணசுவாமி, பி.ஏ.,
பதிப்பாசிரியர்.

## இந்த இதழில்

## ஸ்ரீமரகதவல்லி சமேத ஸ்ரீமரகதாசலேசுவரர் திருக்கோயில், திரு ஈங்கோய்மலை

### முசிரி வட்டம், திருச்சி மாவட்டம்



காவிரி என்னும் பொன்னிநதியின் வடபாங்கர் பாடல் பெற்ற திருத்தலமாக அமைந்தது திரு ஈங்கோய்மலை. அகத்தியரும் மற்றும் பல அருளாளர்களும் பூசித்து வழி பட்ட பெருமைவாய்ந்தது. "காலைக்கடம்பர், மத்தியான சொக்கர், அந்தித் திரு ஈங்கோய்மலைநாதர்" என்ற முறைபெற்ற வழிபாட்டுத் திருத்தலம். மணிவாசகப் பெருமானால் 'ஈங்கோய் மலையதில் எழிலது காட்டியும்' என்று சிறப்பித்துப் பாடப்பெற்றது.

மலைமீது ஏறிவந்து வழிபடும் அன்பர்கட்கு, எல்லா நலங்களும் எய்த இறைவன் நாளும் அருளை வழங்கி வரு கின்றார். தெய்வ மணங்கமழும் இம்மலைச்சாரலைச் சுற்றிப் பல நல்ல தீர்த்தங்கள் உள்ளன. மலைஅடிவாரத்திற்கு அண்மையில் சிவானந்தசாதன நிலையம் உளது. மன அமைதிபெறப் பயிற்சியளிக்கும் அருளாளர் உளர்; அருள்பெற ஸ்ரீ லலிதாம்பிகை திருக்கோயில் உளது. மூர்த்தியும், தீர்த்தமும் ஒருசேரப்பெற வாய்ப்பமைந்தது. திருச்சியிலிருந்து சேலம் செல்லும் சாலையில் 27 கல் தொலைவில் உள்ளது.

அன்பர்கள் வந்து வழிபட்டுத் திருவருள் பெற்றுய்ய வருக வருக என்று அன்புடன் வேண்டுகின்றோம்.

K. V. சிதம்பரம் செட்டியார்.
(அறக்குழுத் தலைவர்).

V. அன்பானந்தன்,
செயல் அலுவலர்,

அறங்காவலர்கள்

A. கந்தசாமி பிள்ளை
M. சங்கப் பிள்ளை
N. சுப்பராயலு நாயுடு
R. பெரியசாமி பிள்ளை




## நல்வாழ்த்துகள் !

சமண சமயம் பற்றி அறிவதற்கு முன் தத்துவ இயல் ஆய்வில் உள்ள இருவகைபற்றி விளக்க விரும்புகின்ரேம். அந்த விளக்கம் எல்லாச்சமயங்களையும் ஆராய்ந்து அறிதற்குரிய அடிப்படையாக அமையும். உலகியலை-தத்துவ இயலை ஆராயும் அறிஞர்கள் இரண்டு அணியாகப் பிரிந்திருக்கிருர்கள். அவற்றில் முதல் அணி, கருத்து முதல்வாத அணியாகும். அதாவது, இந்த உலகத்தில் யாதொரு பொருளும் இல்லை. பொருள் என்று சொல்லப் பெறுவதும், தோற்றம் அளிப்பதும் உண்மையில் பொருளல்ல. அப்படி ஒன்று இருப்பதாக நாம் எண்ணும் எண்ணமே அல்லது கருத்தே அந்தத் தோற்றத்தைத் தருகிறது என்பதாகும். செல்வ, சிரிக்காமல் சிந்தனை செய்! இத்தகைய சிந்தனை வழியில் மிகச்சிறந்த அறிஞர்களெல்லாம் இருக்கிருர்கள். இலட்சிய உலகத்தைப் படைத்த கிரேக்க அரசியல் ஞானி பிளேட்டோ, ஜெர்மன் நாட்டு கார்னல், ஹெகல், நம் நாட்டு சங்கரர் ஆகியோர் இந்த அணியைச் சார்ந்தவர்களே! ஆம்! நீ வெளியே ஒரு மரத்தைப் பார்க்கிருய் அல்லவா? அதனைத் தொட்டு, உணர்ந்து பார்க்கிருய் அல்லவா? ஆனாலும் கூட அவையெல்லாம் பொருள்களல்ல. அவை, உன் உணர்ச்சியில் தோன்றும் வடிவமேயாகும். பலர், இருக்கிருர்கள்—பேசுகிருர்கள். அவர்களைப் பார்க்கிரேம், அவர்கள் பேசுவதைக் கேட்கிரேம். இவையெல்லாம் கூட உண்மையல்ல. அவையும் மனத்தின் மூலம் கிடைக்கும் உணர்ச்சியே! இந்த அணிக்கு எல்லாமே எண்ணத்தின் அடிப்படை என்பதே. பிறத்தல், வாழ்தல், மடிதல் ஆகிய யாவும் எண்ணத்திலேயே நிகழ்வன என்றே இந்த அணி சாதிக்கிறது.

இந்தக் கருத்து முதல் வாதத்தை ஏற்றுக் கொள்ளும் பொழுது, இவ்வுலகனைத்தும் எண்ணம் அல்லது கருத்து தோன்றுதற்குரிய நிலைக்களனுன ஆத்மா என்ற ஒரே முதற் பொருள் அல்லது மூலப் பொருள்

மட்டுமே உள்ளது என்று கூறுவர். எல்லாம் ஒன்றுள் அடங்கும். அந்த ஒன்றே உலகத் தோற்றத்திற்குக் காரணம் என்ற ஒருபொருள் வழக்கில் போய் நிற்பர்.

செல்வ, கருத்துமுதல் வாதத்திற்கு நேர் எதிரானது மெய்ம்மைவாத (எதார்த்த வாதம்)மாம். மெய்ம்மைவாதத்தினர் உலகம் எண்ணத்தில் மட்டுமல்ல, உண்மையில் பொருள் உண்டு என்ற கொள்கையுடையவர். உலகத்திற்கு ஒரு மூலப் பொருள் மட்டுமல்ல, மூலப்பொருள்கள் பல உண்டு என்ற கொள்கையுடையவர்.

செல்வ, சமணர் மெய்ம்மை வாத நெறியினர். உலகம் இருவகையது. ஒன்று உயிர், மற்றது உடலும் ஏனைய சடப்பொருள்களும். அதாவது ஒன்று உயிர்ப்புள்ள சீவன்—அதாவது ஆன்மா. மற்றது இயங்காத் தன்மையுடைய உயிரற்றது. உலகாயதத்தினர் உயிர்ப் பொருளுக்கே உடன்படாமலிருந்தனர். ஆனால், சமணர்கள் உயிர்ப்பொருள் உள்ளது என்று நம்புகின்றனர். உலகாயதத்தினர் கொள்கைப்படி உயிர்ப்பற்ற சடப்பொருள்தான் நிலையானது. உயிர்ப்புப் பொருள் அழியும் தன்மை யது என்ற முரணான முடிவுக்கு வந்தனர். ஆனால், சமணசமயம் உயிர்ப் பொருள்—உயிர்ப்பற்ற பொருள் ஆகிய இரண்டுமே அழியா என்ற கொள்கையுடையது. சுருங்கக் கூறினால், உலகம் உள்பொருள். உலகம் இருவகையது. ஒன்று உயிர்ப்புள்ள சீவன். மற்றது, உயிர்ப்பற்ற சடப்பொருள்—அசீவன். சமணரின் இந்த இருகொள்கை முடிவு, ஓரளவு அறிவிற்கு இசைந்ததேயாம். இனி, சமணசமயம் உயிர்பற்றி என்ன கூறுகிறது என்பதை ஆராய்வோமா?

சமணம், ஆன்மா உண்டு என்ற கொள்கையுடையது. மேலும். ஆன்மா ஒன்றல்ல-பல என்ற கொள்கையும் சமணத்திற்கு உண்டு. ஆன்மாக்கள் எண்ணில. அவை படைக்கப்பட்டன அல்ல; ஆக்கப் பெற்றனவும் அல்ல. இஃது ஆன்மாவைப் பற்றிய சமணக் கொள்கை. மேலும், ஆன்மா இயல்பில் ஞானத் தன்மையுடையது என்பதும் சமணத் தின் கொள்கை. ஆன்மா, உயிர்ப்பற்ற உலகத்தின் உறவிலிருந்து விலகி நிற்கும் பொழுது அதன் உண்மைநிலை விளங்கும். அப்போது தான் ஆன்மாவின் முற்றுணர்வும், முடிவிலாற்றலும் விளங்கித் தோன் றும் என்றும் சமணம் கூறுகிறது. ஆனால், ஞானமயமாகிய ஆன்மா விற்கு உயிர்ப்பற்ற உலகப்பொருள் தொடர்பு எப்படி ஏற்பட்டது? ஏன் ஏற்பட்டது? என்ற வினாக்களுக்கு விடை கூறுவதில் சமணசமயம் அக்கறை காட்டவில்லை. இந்த வினாக்களுக்கு விடையைப் பின்னே உனக்கு எழுதுகின்றோம்.

செல்வ! சமண சமயம், உயிர் உள்பொருள் என்ற கொள்கையுடை யது. உயிர்க்கொள்கையில் வேறு சமயத்தினருக்கில்லாத விந்தையான ஒரு கொள்கை சமணத்திலிருக்கிறது. அதாவது, உயிருக்குப் பருமனும் அளவும் உண்டு என்பதாகும். யானையின் உயிர் அளவிற் பெரியது.

எறும்பின் உயிர் அளவிற் சிறியது. அதுபோலவேதான் மனிதர்களுக்கும்! இந்தக் கொள்கை நமக்குச் சிந்தனையைத் தூண்டுவதற்குப் பதில் சிரிப்பையே தருகிறது. ஆனாலும், சமண நூலார் பல்வேறு உவமைகள் காட்டி இக்கொள்கையை விளக்க முயற்சி செய்கிறார்கள். உயிர், தான் சாரும் உடம்பிற்கேற்பத் தன்னைச் சுருக்கிக் கொள்ளவும், பெருக்கிக் கொள்ளவும் கூடிய இயல்புடையது. அதாவது, உயிர் எந்த உடலை எடுத்துக் கொள்கின்றதோ அந்த உடலின் வடிவத்தை அது எடுத்துக் கொள்கின்றது என்று கூறுகிறது. மேலும் உடல் வளர வளர உயிரும் அளவில்—அதாவது பருமனில் வளர்கிறது. இந்தக் கொள்கையை ஏற்றுக் கொள்வதில் இடர்ப்பாடுகள் பலவுள. சாதாரணமாக உடற் குறையும் உடல் முறிவும் ஏற்படுகிறது. அப்படியானால், உயிர்க்கும் அந்தக் குறையும் முறிவும் ஏற்பட வேண்டும். இந்த ஐயத்தைச் சமணம் விளக்கவில்லை. அடுத்த கடிதத்தில் மேலும் ஆராய்வோம். இன்ப அன்பு.

இன்றக்குடிகளார்

## ஸ்ரீ ஏகாம்பரேசுவரர் ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி தேவஸ்தானம்
## செட்டிகுளம் அஞ்சல்
## பெரம்பலூர் வட்டம்: திருச்சி மாவட்டம்

# திருப்பணிக்கு நிதி உதவ வேண்டுகோள்

—:o:—

ஸ்ரீ தண்டாயுதபாணி மலைக்கோயில் செட்டிகுளத்தின் கீழ்த்திசையில் உள்ளது. வடபழநி, சிறுபழநி என்றும் இது வழங்கப்பெறுகின்றது. மலைமீதேற ஒரு புறத்தில் படிகளும், கீழிறங்கப்பிரிதொரு புறத்துப் படிகளும் அமைந்திருக்கும் எங்குமில்லாத் தனிச்சிறப்பு இம்மலைக்கு உண்டு.

மலைமீது எழுந்தருளியுள்ள கருணை வள்ளல் முருகப் பெருமான் அன்பர்களுக்கு அருளை வாரி வழங்குகின்றான். கந்தக் கடவுளின் அளவற்ற அருளால் நாள்தோறும் மெய்யன்பர்கள் முடிக் காணிக்கை, சிறப்பு பூஜைகள் முதலியன செய்து அருள் பெற்று வருகின்றனர்.

தமிழ்வேளின் பக்தியில் தோய்ந்திருக்கும் தாங்களும் தண்டமிழ் மொழிபேசும் குன்று தோறாடும் குமரனை வந்து வழிபட்டு வாழ்வாங்கு வாழ வேண்டுகின்றோம்.

மேல் திசையில் ஊரின் நடுப்பாங்கர் கம்பீரமாக எழுந்தருளி இருக்கும் ஸ்ரீ ஏகாம்பரேசுவரர் திருக்கோயில் காணத்தகுந்தது. அன்பர்கள் மனதைக் கவர்வதாயுளது. இவ்வாலயத்தின் தனிச் சிறப்பிற்குக் காரணம் சைவ வைணவ ஒருமைப் பாடமைந்த சிற்ப, ஓவியங்கள் நிறைந்திருப்பதேயாகும்.

இவ்வாலய மதில் சுவர் பழுதுற்றுள்ளது. மதில் சுவர் முதலிய திருப்பணிகள் செய்விக்க நிறுவப் பெற்றுள்ள திருப்பணிக் குழுவிற்கு அருளுள்ளம் படைத்த அன்பர்கள் தங்களாலியன்ற பொருளுதவி புரிந்து இறைவன் திருவருள் பெற்றுய்ய வேண்டுகின்றேன்.

இவ்வாறு

சி. ஈசுவரன், பி.ஏ.பி.டி.ஐ.இ. (டிப்)

செயல் அலுவலர்




## வடதிருமுல்லைவாயில் மாசிலாமணீசுவரர் கோயில்

திரு. கே. எஸ். நரசிம்மன், பி.ஏ., பி.எல்., ஐ.ஏ.எஸ்.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

தலஇருப்பிடம் : சமயச் சான்றோர், தேவாரப் பாடல் பெற்ற தலங்களை நாட்டுப் பகுதிகளாகப் பிரிக்கும்போது தொண்டைநாட்டில் 32 சிவத்தலங்கள் இருக்கிறதாகக் கணக்கிட்டுள்ளனர். அவற்றில் ஒன்று வடதிருமுல்லைவாயில். தஞ்சைமாவட்டத்தில் சீர்காழிக்குக் கிழக்கே திருமுல்லைவாயில் என்ற பாடல் பெற்ற தலம் ஒன்று இருப்பதால், அதற்கு வடக்கேயுள்ள இத்தலத்திற்கு 'வடதிருமுல்லைவாயில்' என்று பெயரிட்டனர். புழலேரியின் கரையிலிருக்கிறது. இத்தலம் செங்கற்பட்டு மாவட்டம் சைதாப்பேட்டை வட்டத்திலிருக்கிறது. இது ஆவடி இரயில் நிலையத்திலிருந்து இரண்டரைக் கல் தொலைவிலும், அம்பத்தூர் இரயில் நிலையத்திலிருந்து ஒன்றரைக் கல் தூரத்திலுமிருக்கிறது. சென்னையிலிருந்து பேருந்துகள் செல்கின்றன.

பெயர்க்காரணம்: பழங்காலத்தில் இந்த இடம் முல்லைக் காடாயிருந்தது. தொண்டை நாட்டு மன்னன் ஒருவன் வேட்டையாடி வரும்போது, அவனுடைய யானையின் காலில் முல்லைக்கொடி சிக்கிக்கொண்டது. யானை நின்றுவிட்டது. அரசன் கீழே இறங்கி வாளால் முல்லைக் கொடியை வெட்டவே இரத்தம் வெளிப்பட்டது. அகழ்ந்து பார்க்கும் போது ஒரு சிவலிங்கம் காட்சியளித்தது. (மூல மூர்த்தியின் திருமுடியில் வெட்டுக் குறி இன்றுமுளது). அரசன், காட்டை அழித்துக் கோயில் அமைத்தான். முல்லை வனத்தில் சிவபெருமான் எழுந்தருளியிருத்தலால் இதற்கு "திருமுல்லைவாயில்" என்ற பெயர் ஏற்பட்டது. தல விருட்சமும் முல்லைதான். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலத்து இறைவன்மேற் பாடியருளிய திருப்பதிகத்தின் 10-ஆவது திருப்பாசுரத்தில் இந்த வரலாற்றைக் கீழ்வருமாறு குறித்திருக்கிறார் :—

"சொல்லரும் புகழான் தொண்டைமான்
களிற்றைச் சூழ்கொடி முல்லையாற் கட்டிட்
டெல்லையி லின்பமவன் பெற வெளிப்பட்
டருளிய இறைவனே"

கோயில் அமைப்பு : ஊர் நடுவே கோயில் நடு நாயகமாய் அமைந்திருக்கிறது. சந்நிதி கிழக்குப்பார்த்தது. ஆனல் கோபுரம் தெற்குவாயிலே அணி செய்து நிற்கிறது. அதன் எதிரில் வெளியே உயரமான அழகிய 16 கால் மண்டபம் இருக்கிறது. தெற்குக் கோபுர வாயிலில் உள்ளே நுழைந்ததும் எதிரே விநாயகர் சந்நிதியிருக்கிறது. அதன் விமானத்தில் வெள்ளைச் சலவைக்கல்லிலுலான விநாயகர் உருவம் ஒன்றும் உள்ளது. கோயிலில் விசாலமான வெளிப்பிரகாரம் இருக்கிறது. தென்மேற்கு மூலையில் உற்சவ மண்டபம் இருக்கிறது. வடக்குப் பிரகாரத்தில் முருகன் வள்ளிதெய்வயானையுடன் கோயில் கொண்டிருக்கிறார். அந்தச் சந்நிதிக்குப் பக்கத்தில் கிழக்கு நோக்கி 'சோழபுரீசர்' சந்நிதியும், மேற்கு நோக்கி 'குசலபுரீசர்' சந்நிதியும் இருக்கின்றன. கிழக்குப் பிரகாரத்தில் சூரியன் பைரவர் தனிச் சந்நிதிகள் இருக்கின்றன. நந்தியெம்பெருமான் இறைவன் முகமாகப் பார்க்காமல் கிழக்கு நோக்கியிருக்கிறார். மாசிலாமணீசர் சந்நிதிக்கு நேரே கிழக்குப் பக்கம் ஒரு வாயில் இருக்கிறது. அம்பிகை சந்நிதி இறைவன் சந்நிதிக்கு வலப்புறம் அமைந்திருக்கிறது. பொதுவாக எல்லாக் கோயில்களிலும் இடப்பக்கமே இருக்கும். சுவாமி அம்பிகைசந்நிதிகளைச் சுற்றி உட்பிரகாரங்கள் இருக்கின்றன. மூலலிங்கத்தின் முன்புறம் அர்த்தமண்டபத்தில் இரண்டு எருக்கந்தூண்கள் இருப்பது தனிச் சிறப்புடையது. கோயிலுக்கு வெளியே கிழக்குப் பக்கத்தில் நான்குபுறங்களிலும் படிக்கட்டுகளுடைய 'கலியாணதீர்த்தம்' என்ற அழகிய திருக்குளமும் இருக்கிறது.

மூர்த்திகள் : இறைவன் திருப்பெயர் 'மாசிலாமணீசுவரர்' என்பது. பாடலில் 'முல்லைவாயிலாய் மாசிலாமணியே' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் கூறுகிறார். 'முல்லையழகர்', 'வெட்டுத்தாங்கிய ஈசர்' என்ற பெயர்களும் உண்டு. அம்பிகையின் திருநாமம் 'கொடியிடை நாயகி'. "கூடிய விலயஞ்சதி பிழையாமைக் கொடியிடையுமையவள் காண ஆடிய அழகர்" என்று சுந்தரர் குறிப்பிடுகிறார். பிரமசூத்திரங்களுக்குச் சிவாத்துவித முறையில் பாஷ்யம் இயற்றிய நீலகண்ட சிவாசாரியார் உருவமும், தொண்டைமான் சக்கரவர்த்தியுருவமும் கோயில் முன் மண்டபத்திலிருக்கின்றன.

தலத்தைப் பற்றிய நூல்கள் : சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவொற்றியூரில் சங்கிலியாருக்குக் கொடுத்த வாக்குறுதியை மறந்து எல்லை தாண்டியதும் கண்ணொளி மங்கிவிட்டது. "அழுக்கு மெய்கொடு உன்திருவடி அடைந்தேன்" என்று தொடங்கும் பதிகத்தைப் பாடிக்கொண்டு திருமுல்லைவாயில் வந்தடைந்தார். இறைவன்மீது பதினொரு பாசுரங்களை உடைய திருப்பதிகம் ஒன்றை ஓதியருளினர். "படுதுயர் களையாய் பாசுபதாபரஞ்சுடரே" என்று ஒவ்வொரு பாடலும் முடிகிறது. இதை "இடர்களையும் பதிகம்" என்று ஆன்றோர் கூறுவர்.

அருணகிரிநாதர் "மருமல்லிமாவன நீடிய பொழில் மெல்லிகாவன மாடமை வடமுல்லைவாயிலில் மேவிய பெருமாளே" என்றும், "சொல்லு

முனிவோர் தவம் புரிமுல்லை வடவாயில் வந்தருள் '' என்றும், " வாசமா மலராளொடு செந்திரு மார்பினில் வீறிய மாயவனும் பணி மாசிலாமணி ஈசர் மகிழ்ந்தருள் பெருமாளே '' என்றும் திருப்புகழில் பாடியிருக்கிறார்.

சிவஞானசுவாமிகள் நூறு பாடல்கள் அடங்கிய 'வடதிருமுல்லை வாயில் அந்தாதி' என்ற நூலை இயற்றியிருக்கிறார்கள்.

வடலூர் இராமலிங்கவள்ளலார் தம் அருட்பாவில் 10 பாடல்களை யுடைய 'அருளியல் வினவல்' என்ற பதிகமும், 'திருவிண்ணப்பம்' என்ற பதிகமும் பாடியிருக்கிறார். அவற்றில் ஒரு பாடல் கீழ்வருவது.

வண்ணமா முல்லைவாயிலின் மேவிய
அண்ணலே அமுதே அரசே நுதல்
கண்ணனே உனைக் காணவந்தோர்க் கெலாம்
நண்ணருந் துயர் நல்குதல் நன்றதோ.

செய்யுட்களாலான தலபுராணம் ஒன்று அச்சிடப் பெற்றிருக்கிறது. இப்போது அது கிடைப்பது அரிதாகிவிட்டது. 'தோத்திரப் பாமஞ்சரி' என்று நூல் ஒன்றும் சில ஆண்டுகளுக்கு முன் அச்சிட்டு வெளியிடப் பெற்றிருக்கிறது.

கல்வெட்டுகள் : இந்தக் கோயிலிலுள்ள கல்வெட்டுகளை 1904-ஆம் ஆண்டில் அரசாங்கத்தார் படியெடுத்துப் பதிவு செய்திருக்கின்றனர். "ஜெயங்கொண்ட சோழமண்டலத்துப் புழற்கோட்டத்து அம்பத்தூர் நாட்டுத் திருமுல்லைவாயில்" என்று குறிக்கப் பெற்றிருக்கிறது. உத்தம சோழன், முதலாம் இராஜேந்திரன், மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராஜராஜன், சடாவர்மன் சுந்தரபாண்டியன், விஜயநகர அரிகரராயர், வீரப்பிரதாப புக்கராயர், மல்லிகார்ச்சுனராயர் முதலிய மன்னர்களின் கல்வெட்டுகள் அவை. விளக்கு எரிக்க, பூசை வழிபாடு முதலியவற்றிற் காக நிலம், ஆடுகள் முதலியவற்றைத் தானம் அளித்த செய்திகளை அவை கூறுகின்றன. பச்யைப்ப முதலியார் உச்சிக்கால பூசைக்குப் பொருள் வழங்கியதும், மயிலாப்பூர் செல்லம்மாள் சாயங்காலக் கட்டளைக் காகப் பொருள் வழங்கியதும் பற்றிக் கூறும் இரண்டு கல்வெட்டுகளும் தெற்குக் கோபுரவாயிலுக்கு வெளியில் காணப்படுகின்றன.

திருப்பணி : விஜய நகர சாம்ராஜ்ய வீழ்ச்சிக்குப்பின் உள்ளூர் வேளிர் தலைவர்களால் இக்கோயில் கண்காணிக்கப்பெற்று வந்தது. 1805-ஆம் ஆண்டில் மாசிலாமணி முதலியார் என்பவரால் ஓரளவு பழைய நிலைக்குக் கொண்டு வரப்பெற்றது. பின்னர் அவர் உறவினர் நைசாம் முனியப்ப முதலியார் என்பவரால் இப்போதுள்ள கோபுரம் கட்டப்பெற்றது. தமிழ்நாடு தெய்விகப் பேரவை இந்தக் கோயிலை ஒரு முன்மாதிரிக்கோயிலாக அமைக்க வேண்டும் என்று இப்போது அதன் திருப்பணியை ஏற்றுக் கொண்டிருக்கிறது. 1,36,000 ரூபாய் மதிப்பீட்டில் கோபுரம், சுவாமி அம்மன் விமானங்கள் பிரகாரங்கள் முதலியவற்றின் திருப்பணி நடந்தேறி வருகிறது. கூடிய விரைவில் கும்பாபிஷேகமும் நடைபெறும்.




## தென்முகக் கடவுளின் சிறப்பு

[புலவர் திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.]

முன்னுரை: சிவபிரானின் மூர்த்தங்கள் (திருவுருவங்கள்) போக மூர்த்தம், யோகமூர்த்தம், வேகமூர்த்தம் எனப் பலவகைப்படும். இறைவன் தான் போகியாய்த் திகழ்ந்து, உயிர்களுக்குப் போகத்தைப் புணர்த்துகின்ருன். யோகியாக அமர்ந்து, உயிர்களுக்கு யோக முத்தியை உதவுகின்ருன். வேகியாய் விளங்கி, உயிர்கள் செய்த வினைகளை அழித்தருள்கின்ருன்.

தென்முகக் கடவுள்: தட்சிணமூர்த்தி யோகத்திற்கும் ஞானத்திற்கும் உரிய கடவுள் ஆவர். அவர் தட்சிணம் எனப்படும் தெற்குத்திசை நோக்கி வீற்றிருந்தருள்தலின், அவருக்குத் தட்சிணமூர்த்தி எனப் பெயர் வழங்குவதாயிற்று. தட்சிணமூர்த்தியைத் தமிழில் "தென்முகக் கடவுள்" என வழங்குவர்.

ஞானமூர்த்தி: தட்சிணம் என்னும் சொல்லுக்கு, ஞானம் என்றும் ஒரு பொருள் உண்டு. ஞானத்தின் திருவுருவாய் அமர்ந்து, தன்னை வழிபடுவோர்கட்கெல்லாம் ஞானத்தை வழங்கியருள்பவராதலின், அவருக்குத் தட்சிணமூர்த்தி எனப்பெயர் போந்ததெனினுமாம். ஞானமானது தட்சிணமூர்த்தியின் முன்னிலையில், அவரையே நோக்கி நின்றுகொண்டிருக்கிறதென்றும் கூறுவர். எனவே தட்சிணமூர்த்தியை 'ஞானமூர்த்தி' எனக் கூறலாம்.

திருவுருவ அமைப்புத்திறம்: கோயில்களிற் கருவறையின் தென்புறச் சுவரில் ஒரு மாடத்தில் தட்சிணமூர்த்தி எழுந்தருளியிருப்பார். ஆலங்குடி திருவாரூர் போன்ற சில தலங்களில் தனிச் சந்நிதியும் தட்சிணமூர்த்திக்கு உண்டு. கல்லால மர நிழலில், தனிமையான சூழலில், புலித் தோலின்மேல் அவர் அமர்ந்திருப்பார். சில சிற்பங்களில் தாமரை மலர்மீதும் (பத்மாசனம்) அவர் அமர்ந்திருப்பதுண்டு. அவர்தம் வலக்கால், ஆசனத்தின் கீழ்த் தொங்கவிடப்பட்டிருக்கும். இடக்கால் வளைந்து, வலத் தொடையின்மீது குறுக்காக இருக்கும். இந்நிலை வீராசனம் எனப்படும். சில சிற்பங்களில் உத்குடிகாசனம் முதலிய நிலையிலும் அவர் விளங்குவார். அவர்தம் திருவடியின் கீழ் முயலகன் கிடப்பான். திருவடியானது அவனை அழுத்திக் கொண்டோ, அழுத்தாமலோ இருக்கும்.

தட்சிணாமூர்த்தி முக்கண்ணும் நாற்றோளும் உடையவர். அவருடைய வலக்கை சின்முத்திரையைக் காட்டிக்கொண்டு திகழும். சில சிற்பங்களில் நாட்டிய நூல்கள் கூறும் சாந்தாம்ச முத்திரையும் காட்டுவதுண்டு. இடக்கை, வரதம் அல்லது தண்டம் ஆகிய குறிப்பினை யுணர்த்தும். மற்றொரு வலக்கையில் உருத்திராக்க மாலையும், இடக்கையில் நெருப்பு அல்லது பாம்பும் இருக்கும். சில சிற்பங்களில் உருத்திராக்கமாலைக்குப் பதில் புத்தகமும், நெருப்பு அல்லது பாம்புக்குப் பதில் நீலோற்பல மலரும் விளங்கும். அமுதகலசத்தினையும் அவர் ஏந்தியிருப்பார் தட்சிணாமூர்த்தியின் வடிவம் வளைவு நெளிவுகள் இன்றி, நேராக நிமிர்ந்த நிலையில் திகழும். ஒரு நெறிப்பட்ட உள்ளத்தின் உறுதியையும், தியானநிலையின் இயல்பினையும் உணர்த்துதற்கு, அஃது ஓர் அடையாளம் ஆகும். சடாபாரம் சடாபந்தம் சடாமண்டலம் சடாமகுடம் முதலியவைகளுள், ஒன்றை யுடையவராக அவர் விளங்குவார். அதன்கண் கங்கையும் மதியும் கபாலமும் கொன்றையும் ஆகியவைகள் காணப்படும். திருமுக மண்டலம் தெளிவும் ஒளியும் மகிழ்வும் நிரப்பிச் சாந்த நிலையில் திகழும். அவர்தம் பார்வை தியான-யோக பாவனையில் மூக்கு நுனியை நோக்கியிருக்கும். அவர் பளிங்கு போன்ற வெண்ணிறம் உடையவராக விளங்குவார்.

வியாக்கியான தட்சிணாமூர்த்தி : யோக தட்சிணாமூர்த்தி, ஞான (மேதா) தட்சிணாமூர்த்தி, வீணா தட்சிணாமூர்த்தி, வியாக்கியான தட்சிணாமூர்த்தி என, நான்கு வேறு வகைகளில் இவர் வழிபடப் பெறுவர். பெரும்பாலான கோயில்களில் விளங்குபவர் வியாக்கியான தட்சிணாமூர்த்தியே யாவர். வேதாகமங்களின் நுண்பொருள்களை யெல்லாம் விளக்கி அருள் புரிபவர் "வியாக்கியான தட்சிணாமூர்த்தி" எனப்படுவர். முன் ஒரு காலத்தில் சனகர், சநந்தர், சநாதனர், சனற்குமாரர் என்னும் நான்கு முனிவர்கள் வேதத்தின் பொருள் விளங்காமல் மயங்கி, இறைவனை நோக்கித் தவம் புரிந்தனர். அவர்களுக்கு இறைவன் வெளிப்பட்டு, வியாக்கியான தட்சிணாமூர்த்தியாக வேதங்களின் பொருள் நுட்பங்களை ஆகமங்களால் தெளிவித்தருளினன். "ஏரிசையும் வடவாலின் கீழ் இருந்தங்கு ஈர் இருவர்க்கு இரங்கி நின்று நேரிய நான்மறைப் பொருளை உரைத்து ஒளிசேர் நெறியளித்தோன், "அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு அறம் பொருள் இன்பம் வீடு மொழிந்த வாயான்" எனவரும் தேவாரப் பாடல்கள் இங்குக் கருதற்பாலன.

யோக தட்சிணாமூர்த்தி : இறைவன் வேதங்களின் நுண்பொருள்களை ஆகமங்களைக் கொண்டு தெளிவித்த பின்னருங்கூட, மனம் ஒருநெறிப் படாமல் வருந்திய அம்முனிவர்கள் நால்வர்க்கும், இறைவன் யோக நெறியால் ஞானம் அடைந்து நிஷ்டைகூடும் நிலைகளை விளக்கி யருளினர். கந்தபுராணத்தில், காமதகனப் படலத்தில், இவர் தம் இயல்பு பெரிதும் விளக்கப் பெற்றுள்ளது.

மேதா தட்சிணுமூர்த்தி: இறைவனின் திருவுருவம் ஞானம், ஆனந்தம் என்று இருவகைப்படும். நடராஜப் பெருமானின் திருவுருவம் ஆனந்தம் ஆகும். தட்சிணுமூர்த்தியோ ஞான வடிவினர். ஞானமே திருமேனியாகக் கொண்டு திகழும் அப்பெருமான், தன்னை அன்பால் வழிபடும் அடியார்களுக் கெல்லாம் ஞானத்தைக் கொடுத்து நலம் புரிந்தருள்கின்ருர். இவரையே ஞான தட்சிணுமூர்த்தி அல்லது மேதா தட்சிணுமூர்த்தி எனச் சான்ரேர்கள் போற்றுவர்.

வீணுதட்சிணுமூர்த்தி: "வேதத்து ஒலி கொண்டு வீணைகேட்பார் வெண்காடு மேவிய விகிர்தனுரே" எனவும், "கருங்கடல் வண்ணன் களேபரமும் கொண்டு கங்காளராய் வருங்கடல் மீள நின்று எம் இறை நல் வீணை வாசிக்குமே" எனவும் கூறப்படுவது போல, சிவபெருமான் தம் திருக்கையில் வீணையுடையவராகவும் விளங்குவர். அந்நிலையில் அவர் "வீணுதட்சிணுமூர்த்தி" என்று துதிக்கப்படுவர்.

தத்துவப் பொருள் நுட்பங்கள்: (1) தட்சிணுமூர்த்தியின் பளிங்கு போன்ற வெண்ணிறத் திருமேனி, இவர் உலகப் பொருள் ஒன்றிலும் தோயாது தூயவராகத் திகழ்தலையுணர்த்தும்.

(2) இவர் எல்லாத் தீமைகளையும் அடக்கியாளும் வலிமையுடையவர் என்பதற்கு அடையாளமாகத் தம் வலக் காலால் முயலகனை மிதித்துக் கொண்டு வீற்றிருக்கின்ருர்.

(3) இவர் திருக்கையில் உள்ள சிவஞான போதம், எல்லா ஞானங்களையும் தன்னுள்ளே அடக்கிக்கொண்டு திகழ்கின்றது. ஞானத்தால் தான் வீடு பேறு எய்துதல் இயலும் என்பதனை இது காட்டுகின்றது. நோய்வாய்ப்பட்டு வருந்தும் பிணியாளர்களின் பொருட்டு, மருத்துவர்கள் மருந்துப் பொருள்களைத் தொகுத்துக் கட்டிச் சுமந்துகொண்டு சென்று தந்து நலம் விளைவிப்பது போல, மும்மலங்களின் வயப்பட்டு மயங்கி வருந்தும் உயிர்களின் பொருட்டு இறைவன் அவற்றின் அறியாமையைப் போக்கி அறிவையளிக்கும் சிவஞானபோதச் செம்பொருள் நூலைக் கையில் ஏந்திக் கொண்டிருக்கின்ருன்.

(4) இவர் வைத்துக் கொண்டுள்ள உருத்திராக்க மாலை 36 அல்லது 96 என்னும் தத்துவங்களை யுணர்த்துகின்றது. இது, திருவைந்தெழுத்தை உருத்திராக்கமாலை கொண்டு பன்முறை எண்ணிப் பல காலும் செபித்து உருவேற்றித் தியானித்தலே ஞானத்தை அடையும் நெறி என்றும் குறிப்பிடுகின்றது. இதனுற்ருன் தட்சிணுமூர்த்தியின் முன்னர் இருந்து தியானம் செய்யும்படி நூல்கள் கூறுகின்றன.

(5) இவர் இடக்கையில் அமிர்த கலசம் ஏந்திக் கொண்டிருத்தல், அனைத்துயிர்க்கும் பேரின்பத்தை அளிக்கவல்லவராதலை அறிவிக்கின்றது.

(6) இவர் புலித்தோலின் மீது அமர்ந்திருத்தல், தீய சக்திகளை அடக்கி ஆளும் ஆற்றல் மிக்கவர் என்பதனைக் காட்டுகின்றது. மேலும்

இவர் தாமரை மலரில் அமர்ந்திருக்கும் தன்மை, 'மலர்மிசை ஏகினன்' எனத் திருவள்ளுவர் குறிப்பிடுவதற்கு ஏற்ப, அன்பர்களின் இருதயம் ஆகிய தாமரை மலரில் எழுந்தருள்பவர் என்பதனைக் குறிக்கும். தாமரை மலர் ஓங்காரம் ஆகிய பிரணவத்தையும் உணர்த்தும் என்பர்.

(7) எவராலும் வெல்ல இயலாத காமதேவனை எரித்தருளிய இவர் தம் செயல், ஞானமும் வீடும் எய்த விரும்புவோர் எவரும் ஐம்பொறி அவாக்களை அறுத்தொழித்துப் புலனடக்கம் உடையராதல் வேண்டும் என்பதனைப் புலப்படுத்துகின்றது. துறவு நெறியின் சிறப்பினையும் தட்சிணாமூர்த்தம் இங்ஙனம் செம்மையுற உலகுக்குத் தெளிவிக்கின்றது.

(8) படர்ந்து பரவியுள்ள ஆலமரமும் அதன் நிழலும், மாயையினையும் அதன்காரியம் ஆகிய உலகினையும் சுட்டுகின்றன. சங்க நூல்களில் 'ஆலமர் செல்வன்' என்னும் பெயரே, தட்சிணாமூர்த்திக்குப் பெருவழக்காகக் காணப்படுகின்றது.

(9) தட்சிணாமூர்த்தியின் அருகிலுள்ள வெள் விடை தருமத்தையும், அதன் இயல்பினையும் விளக்குகின்றது. அவரைச் சூழ்ந்துள்ள விலங்குகளும் பிறவும், அவரே அனைத்துயிர்க்கும் தலைவர் (பசுபதி) என்பதற்கு அடையாளம் ஆகும்.

(10) அவர் தம் உடலின் மீது அணிந்துள்ள பாம்பு, குண்டலி சத்தியின் அறிகுறியாகத் திகழ்கின்றது.

(11) வடக்கு முகமாகவேனும் கிழக்குமுகமாகவேனும் இருந்தே தியானம் முதலிய செயல்களைச் செய்யவேண்டும் என்பது விதி. ஆனால் தட்சிணாமூர்த்தியோ தென்முகம் நோக்கி வீற்றிருக்கின்றார். அஃது, அவர் நம்மைப்போல விதி விலக்குகளுக்கு உட்பட்டவர் அல்லர், அப்பாற்பட்டவர் என்பதனை அறிவிக்கும்.

சின்முத்திரையின் நுண் பொருள்: தட்சிணாமூர்த்தி தம் திருக்கையால் சின்முத்திரையைக் காட்டிக் கொண்டிருக்கின்றார். சித்-முத்திரை சின்-முத்திரை எனப்படும். சித்-ஞானம், முத்திரை-அடையாளம். ஞானப்பொருளின் அடையாளக் குறிப்பாகத் திகழ்வது சின்முத்திரை எனலாம். பெரு விரலும் சுட்டுவிரலும் ஒன்றையொன்று வளைந்து சார்ந்து நிற்க, ஏனைய மூன்று விரல்களும் விலகித் தனித்து நின்று கொண்டிருக்கும் நிலை, சின்முத்திரை ஆகும். பெரு விரலின் உதவியின்றி நாம் எதனையும் பிடித்தல் எடுத்தல் முதலியன செய்தல் இயலாதாகலின், அது சின்முத்திரையிற் பதியினைக் குறிக்கின்றது. சுட்டுவிரல் தன்னியல்பில் ஏனைய மூன்று விரல்களோடு சேர்ந்து, பெரு விரலைப் பிரித்து நிற்கின்றது; அந்நிலை, பசு எனப்படும் உயிரானது ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலங்களோடு சேர்ந்திருத்தலால், பதியாகிய கடவுளின் தொடர்பைப் பெறாமல் பிறப்பிறப்புத் துன்பத்துட்பட்டு உழலுதலை யுணர்த்தும். உயிரானது பிறப்பு இறப்புத் துன்பங்களினின்று விடுபடுதல் வேண்டுமாயின், மும்மலங்களின் தொடர்பை விட்டுப் பதிப்

பொருளின் திருவடிகளை அடையப் பெறுதல் வேண்டும். அதனை விளக்கவே சின்முத்திரையில் சுட்டு விரலானது வளைந்து பெரு விரலின் அடியைச் சென்று தொட்டுக் கொண்டிருக்கின்றது. இது சின்முத்திரையின் நுண்பொருள் ஆகும்.

சொல்லாமற் சொல்லும் நல்லாசிரியர் : பல்வேறு சமயங்கள் பல்வேறு வகைகளிற் கடவுளை வழிபடுகின்றன. தாய் என்றும், தந்தை என்றும் அரசன் என்றும், தலைவன் என்றும், பிணிதீர்க்கும் மருத்துவன் என்றும், அறியாமை போக்கும் ஆசிரியன் என்றும், பலவகை நிலைகளில் கடவுள் வழிபாடு உலகில் நிகழ்ந்து வருகின்றது. அவற்றுள், கடவுளை ஆசிரிய நிலையில் வைத்து வழிபடும் முறையே தட்சிணாமூர்த்தம் எனலாம். தன் வாய்மொழிகளாற் கற்பிக்கும் ஆசிரியனைவிட, ஒப்புயர்வற்ற தன் தூய இனிய வாழ்வின் சிறப்பினால் மாணவர்களுக்கு உள்ளொளி பெருகச் செய்யும் திறம் உடையவனே, மிகவும் சிறந்த நல்ல பேராசிரியன் ஆவான். அதனாலேயே அருணகிரிநாதர் தம் திருச்செந்தூர்த் திருப்புகழில் "ஊமைத்தேவர்" எனக் குறிப்பிடுகின்றார். தட்சிணாமூர்த்தி, வேதாகமப் பொருள்களை யெல்லாம் "சொல்லாமற் சொல்லி" விளக்குகின்றார் என்கின்றார் பரஞ்சோதி முனிவர். அங்ஙனம் மாணாக்கர்களைச் சிந்திக்கச் செய்து உய்த்துணர வைக்கின்ற ஒப்புயர்வற்ற சிறந்த தெய்விகஅருட்பேராசிரியர், தட்சிணாமூர்த்தி எனலாம்.

முடிவுரை : மனித குலத்தின் விழுமிய பெருஞ்செல்வமாக விளங்கும் சிந்தனைத் திறன், சிந்தித்து உணரவல்ல உரிமைச் சிறப்பு, சிந்தித்து உணர்வதனால் விளையும் தெளிவுநலம் ஆகிய அரிய பல குறிக்கோள்களைத் தட்சிணாமூர்த்தம் தக்காங்கு விளக்கிக் கொண்டு தனிப்பெருஞ் சிறப்புடன் திகழ்கின்றது.

——:():——




## வாழ்க்கை என்ற மாளிகை

(தவத்திரு. குன்றக்குடி அடிகளார்)

வாழ்க்கை, மிக மிக அருமைப்பாடுடையது. "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்" என்பது அருள்வாக்கு. உடல்கொண்டு, உண்டு, உறங்கி நடமாடுவதெல்லாம் வாழ்வாகி விடாது. வாழ்க்கை உயிர்ப்புள்ளது; வளர்ச்சி பொருந்தியது. உயிர்ப்பும் வளர்ச்சியும் இல்லாத வாழ்க்கை வசை நிறைந்த வாழ்க்கை. வாழ்க்கை, நிறைந்த அறிவியலின்பாற்பட்டது; நிறைந்த அருளியற் சார்புடையது. வாழ்க்கையின் ஆழத்திற்கும் அகலத்திற்கும் உயர்வுக்கும் எல்லையில்லை. எப்படி இறைவனுடைய அடியும் முடியும் காணமுடியாதனவோ, அது போலவே வாழ்க்கையின் வளர்ச்சிக்கு முடிந்த முடிபுமில்லை; வரையறுக்கப்பட்ட அடிநிலையுமில்லை.

ஊற்று வளமுள்ள குளம், பயன்படும்; தூய்மையாக இருக்கும். அதற்கும் அதனைச் சார்ந்தோருக்கும் என்றும் இன்பம் உண்டு. ஏன்? அது புண்ணியத் தீர்த்தமாகவும் ஆம். ஆனல், ஊற்றுவளமில்லாத குளமாக இருக்குமானல் குட்டை என்று பெயர் மாற்றம் பெறும்; தூய்மை கெடும்; தொல்லை கொடுக்கும். அதனல் அது தூர்த்து மூடப்பெறும். அதுபோல மேலும் மேலும் சிந்தனை ஊற்றும், செயல் வளமும் உடையோர் வாழ்க்கை, பயன்படும். அத்தகையோர் வாழ்க்கை, பிறந்த இனத்திற்கும், நாட்டிற்கும், பேசும் மொழிக்கும் நிறைந்த பெருமை சேர்க்கும். ஆனல் சிந்தனை செய்யாமல்—சிந்தனை செய்ய மறுத்து உண்டு உடுத்து வாழும் விலங்கியல் வாழ்க்கையுடையோரின் வாழ்க்கை, அவர்களுக்கும் துன்பம் தரும்; மற்றையோருக்கும் துன்பம் தரும்.

ஆறு, வற்ருதது; வளம் பெருக்க வல்லது; பாவம் தொலைப்பது; புண்ணியம் வளர்ப்பது. ஏன்? ஆற்றில் ஓடும் தண்ணீருக்கு அந்தத் தகுதி வந்துவிட வில்லை. இரண்டு கரைகளுக்கிடையே ஓடுவதாலும் அந்தச் சிறப்பு அதற்கு இல்லை. குளத்தில் கிடப்பதும் தண்ணீர் தானே! அங்கேயும் கரை உண்டல்லவா? தாம் தொடர்ந்து ஓடுவதன்

மூலம் தம்மை நாடி வந்து முழுகும் மனிதனிடத்தில் தோற்றுவிக்கும் தத்துவச்சிந்தனையாலேயே சாதாரண ஆறுகள் புண்ணியத் தீர்த்தங்களாகின்றன. ஆறுகள் தொடங்கிய இடத்தில் நிற்பதில்லை. பல நூறுகல் தொலைவு தொடர்ந்து ஓடுகின்றன. அதேபோல மனிதன் வாழ்க்கையைத் தொடங்கிய கட்டத்திலேயே தேங்கி நிற்கக் கூடாது. தொடர்ந்து உயிர்ப்புணர்ச்சியுடன் மனித குல வரலாற்றோடு இணைத்துக் கொண்டு வாழ்க்கைப் பயணத்தை நிகழ்த்திக் கொண்டிருக்கவேண்டும். அது மட்டுமா? ஆறு, நெடுங்கடலுள் கலக்கும் உயர்ந்த இலட்சியத்தோடு ஓடிக் கொண்டிருக்கிறது. ஓடும் வழியிலுள்ள மக்களை மறந்தா அது ஓடுகிறது? விலங்கினங்களை மறந்தா ஓடுகிறது? தாவர இனங்களை மறந்தா ஓடுகிறது? இல்லையே! தான் ஓடும் பகுதியில் வாழும் அனைத்துயிர்களுக்கும் ஆறு வாழ்வளிக்கிறது; இலட்சியத் திசையிலும் தொடர்ந்து ஓடுகிறது. நல்ல துறவுக்குரிய பண்பு இன்று ஆற்றினிடமே இருக்கிறது. இலட்சியப் பயணம், தூய்மை, தன்னலத்துறவு, மற்றவர்க்குப் பயன்படும் திறன், தீமை செய்வோருக்கும் வாழ்வளித்தல் ஆகிய பண்புகளை ஏற்று வாழும் துறவிகளைக் காணோம். ஆனால் கங்கையும் காவிரியும் இந்தப் பண்பாட்டின் பெட்டகங்களாகும். அதனாலன்றோ, கங்கை, எம்பெருமான் திருமுடிமேல் இருக்கும் தகுதியைப் பெற்றது!

வாழ்க்கையென்பது பிழைப்பு நடத்துவதன்று. வாழ்தலே வாழ்க்கை. வாழ்க்கை வெற்றிபெற—வளமுற மின்சார வலிமை போன்ற உயிர்ப்பாற்றல் தேவை. பழக்க வழக்கங்கள் என்ற பாசியால் சிந்தனை என்ற ஊற்றுக்கண் அடைபடாமலிருக்கவேண்டும். அறிவு என்ற புதுப்புனல் தீமைகளை அகற்றி இன்பம் தருவதோடன்றிக் கிழட்டுத்தனத்தை நீக்கி எழுச்சி நிறைந்த இளமையை வழங்கவேண்டும். வரலாற்றுப் பெருவெள்ளத்தைத் தன்திசையில் விடாமல் தடுத்து நிறுத்தி ஆக்கவழியில் நெறிப்படுத்தும் ஆள்வினை தேவை. வாழ்க்கை, மனிதனுக்குச் சுமையாகக் கூடாது. அதைத் தூக்கிச் சுமந்து அவன் எய்த்து அலையக் கூடாது. வாழ்க்கை, இன்பத்தின் வைப்பாக அமைதல் வேண்டும். இதற்கு யார் பொறுப்பு? சிலர், கடவுள் என்பர். சிலர் தலைவிதி என்பர். சிலர், நாடு என்பர். சிலர், அரசு என்பர். சிலர், சூழ்நிலை என்பர். இன்னும் சில மேதாவிகள், வாழ்க்கை எப்பொழுதுமே துன்பம் என்று கூறி முற்றுப்புள்ளியிடுவர். இங்ஙனம் கூறுவதனைத்தும் தவறான கொள்கை. வாழ்க்கை கட்டி முடிக்கப் பெற்ற மாளிகையன்று; கட்டிக்கொண்டேயிருக்கவேண்டிய மாளிகை. மனிதன், தூய சிந்தனையென்ற அடித்தளத்தில் நல்லறிவு என்ற கற்களை அடுக்கி, உணர்வு என்ற சாந்தினைப் பூசி அவனே கட்டுவது தான் வாழ்க்கை என்ற மாளிகை. இந்த மாளிகையைக் கட்டுவது எப்படி என்பதை வாழ்வியற் பொறியியலாளராகச் சிறந்து விளங்கிய வள்ளுவர் விளக்கி அதற்கு வழி காட்டியுள்ளார். அவர் வழியில் வாழ்க்கை என்ற மாளிகையைக் கட்டுவோமாக.

(தொடரும்)

# சமய ஒழுக்கம் (மா. ப. தியாகராஜன், பி. ஏ.)

"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப்படும்"

என்பது திருவள்ளுவர் வாக்கு. உயிரை ஓம்புவது உடல் செயலற்று வீழாது உலவிவரவும், அது உபாதியின்றி ஆரோக்கியமாக இருக்கவும் உதவுகின்றது. விலங்குகளும் உயிரோடுதான் வாழ்கின்றன. எனினும் அவைகள் ஒழுக்கத்துடன் வாழ்வதில்லை. ஒழுக்கம் வாழ்வில் நல்ல பயனைத்தர உதவுவதால் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும். உடலோடு உயிர் ஒட்டி வாழ்வதுமட்டுமே வாழ்வெனக்கருதுவது ஆறறிவு படைத்த மனிதப்பிறவியின் சுபாவமன்று. உடலையும் உயிரையும் உடனுறைந்து வாழவைக்கும் ஒரு சக்தி உள்ளது. அது இவ்வுயிர் மாட்டு இயல்பாக அமைந்துள்ள குற்றங்களைப் போக்கிக்கொள்ள இவ்வுடலுடன் சம்பந்தப்படுத்தப்பட்டுள்ளதெனத் தெரிந்து அவ்வுடல் கொண்டு எவ்வாறு ஒழுகினல் உயிர், மலங்கள் நீங்கி தூய்மைப்படும் என்று ஒழுகுதல் மனிதப்பிறவியின் மாண்பாகும். இவ்வுடம்பில் பசி, பிணி, அயர்வு முதலிய துன்பங்கள் இயல்பாக இருப்பதைக் காண்கிருேம். அத்துன்பங்களைப் போக்கிக்கொள்ள இவ் வுடற் கரணங்களாய கை கால்களால் உழைக்கின்ருேம். அதேபோல அந்தக்கரணங்களாய மனம், புத்தி, சித்தம், அகங்காரமாகிய நான்கின் உழைப்பால் உயிர்ப்பிணியாய பிறவித் துன்பம் நீங்கவேண்டும். எனவே உடல் உபாதி நீங்கி, பசிதீர உணவு அருந்தி இவ் வுடல் ஓய்வு பெறும் சமயங்களில் உயிர்ப்பிணி நீங்க என் செய்வது என்று சிந்தித்ததன் விளைவே சமய ஒழுக்கங்களாவன.

பண்டைய நாட்களில் நீர்வளம், நிலவளம் நிறைந்து ஓய்வு நேரம் மக்களுக்கு அதிகம் கிடைத்திருந்தபோது கலைவளர்ச்சியிலும் அறிவுத்துறையிலும் மக்கள் வளர்ச்சியடைந்து சமய ஒழுக்கங்களைக் கற்பித்தனர்; உடலுழைப்பிற்குத் தொழில்துறைகள் பலவாருக இருப்பது போன்று சமய நெறிகளும் பலவாயுள்ளன. அவற்றுள் ஆறுசமயங்கள் முக்கியமாக வழக்கில் கையாளப்பட்டு வந்துள்ளன. அவை சைவம், வைணவம், கௌமாரம், காணுபத்தியம், சாக்தேயம், சௌரமானம் என்பனவாம். சைவம் சிவபெருமானையும், வைணவம் திருமாலையும், கௌமாரம் முருகக்கடவுளையும், காணுபத்தியம் கணபதியையும், சாக்தேயம் அம்பிகையையும், சௌரமானம் சூரியனையும் வழிபடு கடவுளாகக் கொண்டுள்ளன. இவையேயன்றி சமயாசாரியர்களையே கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயங்கள் கிருத்துவமதம், இஸ்லாமியமதம், பௌத்தமதம், சமணமதம் இன்னும் பலவாக விளங்குகின்றன. அவை கற்பிக்கும் வாழ்க்கையில் மேற்கொண்டு ஒழுகத்தக்க நெறிகளே சமய நெறிகள், சமய ஒழுக்கங்களாவன.

அவற்றுள் சைவ சமய ஒழுக்கங்கள் திருநீறணிதல், உருத்திராக்கம் தரித்தல், சிவனை வழிபடு கடவுளாக ஏற்று அவனை அருவமாகவும், உருவமாகவும், அருவுருவமாகவும் வணங்குதல், அவனுடைய அடியவர்களைப்

பேணல், அவன் பொலிவிழாக்கண்டார்தல், அவனுடைய ஆலயங்களே அரனென வழிபடல், பஞ்சாக்கர மந்திரம் ஓதல் என்பனவாம். அதுவுமன்றி ஜீவகாருண்ய ஒழுக்கத்தை, அன்பே சிவமெனக் கருதி மேற்கொண்டு வாழ்தல் சைவநெறியில் வாழ்வதாகும். வைணவம் திருமண் தரித்தல், அஷ்டாக்ஷரம் ஜபித்தல், திருத்துழாய் மாலே அணிதல், திருமாலே வழிபடல், அவனுடைய தாசர்களேயும் ஆழ்வாராதியர்களேயும் போற்றல், ஆலயவழிபாடு முதலிய ஒழுக்கங்களே மேற்கொண்டுள்ளது. சாக்தேயம் குங்குமம் அணிதல், அம்பிகையை வழிபடல், காயத்திரி முதலிய மந்திர ஜபம் மேற்கொண்டொழுகல் முதலியனவாம். இவ்வாராக ஒவ்வொரு சமய ஒழுக்கமும் அடிப்படையாக ஒரு சின்னம் ஒரு மந்திரம் ஒரு மூர்த்தம் தனித்தனியாகக் கொண்டு விளங்குகின்றதெனினும் எல்லாவற்றின் குறிக்கோளும் மனிதன் நல்லவண்ணம் தூய்மையாக வாழ்ந்து தீமைகளுக்குப் பயந்து நன்மைகளேக் கடைப்பிடித்து வாழவேண்டுமென்பதேயாகும்.

எனவே அந்தக் குறிக்கோளுடன் மக்கள் ஏதேனுமொரு சமயஒழுக்கத்தை மேற்கொண்டு வாழ்வது இன்றியமையாததாகும். இல்லேயேல் விலங்குகள்போல் உடல் வளர்ச்சியிலும் புலனுகர்ச்சியிலும் வாழ்க்கையைக் கழித்து அழிவதே உயிர் உடலுடன் கூடிவாழ்வதின் பயனுக முடியும். அதனுல் உயிர் உடற் சார்பின்றி நிற்கும்போது என்னவிதமான வேதனேக்குள்ளாகும் என்ற உண்மையை நினேப்பூட்டும்படி அருணகிரிநாதர் கந்தரலங்காரத்தில் ஒரு பாடல் கூறுகிருர் :—

கிழியும் படியடற் குன்றெறிந்தோன் கவி கேட்டுருகி
இழியுங் கவிகற்றிடா திருப்பீ ரெரிவாய் நரகக்
குழியுந் துயரும் விடாய்ப்படக் கூற்றுவனூர்க்குச் செல்லும்
வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே.

அப்படிப்பட்ட ஒருநிலே ஒவ்வொருவருக்கும் வந்தெய்தும் என்பதை நினேப்பூட்டவே சைவ சமயம் திருநீறணிதலே மேற்கொண்டுள்ளது. திருநீறு நிலேயாமையை உணர்த்துகிறது. “ஒரு பிடி சாம்பலும் காணுத மாய உடம்பிதில்” உயிர்வாழ்கின்ற காலத்திற்குள் என்றும் நிலேத்துள்ள இறைவன் திருவடியைச் சார்பாகக் கொள்ளுதல்வேண்டுமென்றும், வாழ்வோ தாழ்வோ நிலேயானதன்று என்றுணர்ந்து, வாழ்வது வந்தபோது மனந்தனில் மகிழ வேண்டாமென்றும், தாழ்வது வந்ததாலுல் தளர்வரோ தக்கோரென்றும் உணர்ந்து சாந்தமான நிலேயில் வாழவேண்டுமென்பதே திருநீறணிதலின் நோக்கமாகும்.

“சாந்தமீதென்றெம்பிரானணிந்த நீறு கொண்டார் இடர்களேயாய்” என்று திருஞானசம்பந்தர் பாடியருளியுள்ளார். எனவே சைவ சமய சின்னமாகிய திருநீறணிதல் சைவ ஒழுக்கத்தின் சிறப்பாகும். மேலும் திருநீறு உடம்பில் 12 இடங்களில் தரித்துக்கொள்ள வேண்டுமென்றும், மங்காமல்பூசி மகிழ வேண்டுமென்றும் கூறப்படுகிறது. விடிவதுமே வெண்ணீற்றை மெய்யிற் பூசவேண்டுமென்றும் சிவாயநமவென்று பஞ்சாக்கரம் ஓதித் திருநீறணிதல் வேண்டுமென்றும் கூறப்படுகிறது.

இவையாவும் சைவ சமய ஒழுக்கத்தின் பாற்படும். உருத்திராக்கம அணிதல் கருணை உள்ளம் இருக்க வேண்டுமென்று உணர்த்து கிறது. சைவ சமயத்தில் சிவபெருமானின் திருமேனியை அருவமாகவும் உருவமாகவும் அருவுருவமாகவும் பாவித்து வழிபட வேண்டுமென்று கற்பிக்கப் படுகிறது. சிவலிங்கமே அவருடைய அருவுருவத் திருமேனி யாகக்கொண்டு சிவாலயங்களில் மூலஸ்தானத்தில் சிவலிங்கத்திற்கு அபிஷேக ஆராதனைகளைச் செய்கின்றனர். சிவனுடைய உருவத்திரு மேனி பலவாகக் கொண்டு அவைகளுக்கு விழாக்கள் கொண்டாடப்படு கிறது. அவற்றுள் சோமஸ்கந்த மூர்த்தம் ஆற்றல் அடல்விடை யேறிக்காண்பது. அன்பு அறிவு ஆற்றல் ஒருங்கே உருவமாகக் காட்சி அளிப்பது போலுள்ளது. சிவன் அறிவுப் பிழம்பாகவும் அம்பிகை அன் பின் வடிவமாகவும், விடை ஆற்றலின் சின்னமாகவும் விளங்குவதைக் காண்கிறோம். வாழ்க்கையில் அறிவு, அன்போடு கூடிய அறிவு எதை யும் வெற்றிகரமாக முடிக்கும் ஆற்றல் வேண்டற்பாலதே. அருஉருவத் திருமேனியாகிய சிவலிங்க தத்துவமும் இம்மூன்றாகக் காட்சியளிப்பதைக் காணலாம். சிவலிங்கம் மேலோங்கி அறிவு கொழுந்துவிட்டெரிவது போன்றும், ஆவுடையார் அணைந்த இரு அன்பின் இணைந்த கரங்களைப் போன்றும் அடிப்பீடம் இவற்றைத் தாங்கும் ஆற்றலெனவும் விளங்கு கின்றன. நடராஜவடிவம், நம்வாழ்விற்கு இன்றியமையாத பஞ்சபூதங் களின் தொகுப்பேயாகும். சடைமுடி பிருதிவி தத்துவத்தையும், கங்கை அப்பு தத்துவத்தையும், அங்கையில் அக்கினி தேயுவையும், வாயு தத்துவம் அவன்மீது அணிகலனாக விளங்கும் அரவாபரணங்களாலும், இந்நான்கையும் தாங்கும் ஆகாயத் தத்துவத்தில் அவன் ஆடும் தன்மையையும், இவற்றால் அவன் புரியும் பஞ்சகிருத்தியங்களையும் உவ மித்து காட்டுவதே நடராஜவடிவம். இப்படிப் பலவாறாக விளங்கும் உருவத் திருமேனியையோ அருஉருவத் திருமேனியையோ சிவலிங் கத்தையோ பஞ்சாக்கரம் ஓதி வழிபடல் சைவ சமய ஒழுக்கமாகும். வெளிய உருவத்தானை வணங்கும் வெண்காடேயென்றும் ஒளிகொள் மேனியுடையாய் என்றும் திருஞானசம்பந்தர் பாடியருளியுள்ளார். எனவே அருவத்திருமேனியாய சிதாகாசத்தை சிற்றம்பலத்தை வழி படுதலும் சைவ ஒழுக்கமாகும். இவ்வாறு சைவ சமய தத்துவங்களை விரித்துக் கூறுவது பதினான்கு சாத்திரங்காளகும். சிவபெருமானைப் பலவாறாகப் போற்றி வழிபடும் பாடல்கள் திருமுறைகளாக வகுக்கப் பட்டுள்ள பன்னிரண்டு திருமுறைகள் சைவத்திற்குப் பிரமாண நூல்க ளாகும். ஒவ்வொருசமயத்திற்கும் இவ்வாறு பிரமாண நூல்கள் உண்டு. அவைகள் கற்பிக்கும் சமய ஒழுக்கங்களே அந்தந்தச் சமயங்களின் ஒழுக்க நெறியாகும். ஒவ்வொன்றிலும் பொதுவாக புறவழிபாடு போதிக் கப்பட்ட போதிலும் குருமுகமாக சாத்திரங்களை உணர்ந்து அனுஷ்டான ஒழுக்கங்களை உபதேசவாயிலாகவும் தீக்ஷைபெற்று மேற்கொள்ளல் அவ் வச்சமயங்களுக்கும் தனிப்பட்ட முறைகளுள்ளன. எந்தச் சமயத்தின் ஒழுக்க நெறியைக் கைப்பற்றி ஒழுகினாலும் அவ்வவற்றின் உண்மை களை உணர்ந்து ஒழுகுதல்வேண்டும்.




## "கண்ணனைக் கண்ட கண்கள்"

இனிதிரைத் திவலை மோத எறியும்தண் பரவை மீதே
தனிகிடந் தரசு செய்யும் தாமரைக் கண்ணன் எம்மான்
கனியிருந் தனைய செவ்வாய்க் கண்ணனைக் கண்ட கண்கள்
பனியரும் புதிரு மாலோ என் செய்தேன் பாவியேனே.

இத்திருப்பாசுரம், திருவரங்கத்திற் கோயில் கொண்டுள்ள அரங்க நாதனை நோக்கி, தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச் செய்ததாகும்.

(பொழிப்புரை) அலைகள் மோதுதலால் உண்டான நுண்துளிகளை வீசி எறிகின்ற குளிர்ந்த கடல் (போன்ற காவிரியாற்றின்) நடுவில் தனியே அறிதுயில் கொண்டு அருளாட்சி செய்து கொண்டிருக்கும், தாமரை மலர் போன்ற கண்களை உடையவனும், எங்குல தெய்வமும், கோவைக்கனி போன்று சிவந்த இதழ்களை உடையவனும் ஆகிய கண்ணபிரானைக் கண்டதும் எம் கண்களில் குளிர்ந்த மகிழ்ச்சிக் கண்ணீர் பெருகா நின்று, (அவ்வழகை முழுதும் அனுபவிக்க விடாது) மறைப்ப தனுல், நற்பேறில்லாத பாவியாயினேன்.

(விளக்கவுரை) காவிரிக்கும் கொள்ளிடத்திற்கும் நடுவே அறிதுயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அரங்கநாதனை இயல்பாகவே திருப்பாற் கடலிற் பள்ளி கொண்டிருக்கும் திருமாலாகக் கண்டு களித்திருக்கிருர் தொண்டரடிப்பொடியாழ்வார். ஆகவே தான் காவிரியைப் "பரவை" (கடல்) என்று அருளியிருக்கிருர்.

கடல் நீர் இயற்கையில் உவர்ப்புடையது. ஆகவே கடலின் நடுவில் இருக்கும்போது வீசுகின்ற நுண்ணிய நீர்த்திவலைகள் உவர்ப்புடைய தாகவே இருக்கும். ஆனுல் திருப்பாற்கடலிலும், காவிரியாகிய கடலி லும் வீசுகின்ற நுண்துளிகள், உவர்ப்பின்றியிருக்கும் என்பதையும், பெருங்கடலில் அலைகள் மோதுதலால் உண்டாகின்ற பேரோசையின்றி இருக்கிறது என்பதையும் காட்டுவான் வேண்டி, "இனிதிரைத் திவலை" என்ருர். கார்மேகவண்ணனுகிய அரங்கநாதன் மீது படும்படியாக வீசியெறிதலை, வானில் உள்ள கரிய மேகக் கூட்டத்தின் மீது மோதும் படியாக வீசியெறிவதாகக் கண்டு "மோத எறியும்" என்ருர்.

கடலில் வெப்பம் மிகுதியாக இருக்கும். ஆனல் இக்காவிரியாகிய கடலோ, அரங்கநாதனகிய கார்மேகம் சூழ்ந்திருப்பதனுலும், வான்முட்டும் மரங்கள் அடர்ந்த சோலே சூழ்ந்திருப்பதனுலும் குளிர்ச்சி பொருந்தியிருப்பதனை "தண் பரவை" என்று குறிப்பிட்டுள்ளார்.

ஒப்பாரும் மிக்காரும் இல்லா ஒருவனைப் பேருறக்கம் இன்றி அறிதுயில் கொண்டு அடியவர்களின் மனத்தில் ஆட்சி செய்வதை "தனிகிடந்தரசு செய்யும்" என்ருர்.

நீல நிறமான அரங்கநாதனின் முகத்தில் சிவந்த கண்கள், நீலநிற வாவியில் இருக்கும் தாமரை மலர்களை நினைவு படுத்துவதால் "தாமரைக் கண்ணன்" என்ருர். அரங்கநாதனே தம் குலதெய்வம் என்பதை "எம்மான்" (எம்பெருமான்—எம்தலைவன்) என்று குறிப்பிட்டார்.

திருமாலின் நிறத்தை நீலநிறம், கார்மேகம், பச்சை நிறம் என்று பலவாருகக் குறிப்பிடுவர். ஆனல் தொண்டரடிப்பொடியாழ்வாரோ பசுமையாகக் காண்கிருர். (பச்சை மாமலை போல் மேனி, பவளவாய் கமலச் செங்கண்) பச்சை நிறமுடைய அரங்கநாதனின் முகத்தில் சிவந்த இதழ்கள் இருப்பது, அடர்ந்து படர்ந்திருக்கின்ற கோவைக் கொடியினூடே பழுத்துத் தொங்கிக் கொண்டிருக்கும் கோவைப்பழத்தை நினைவு படுத்துவதாக எண்ணினர். கோவைப் பழமானது கொடியில் இருந்து தனியே பறித்தெடுக்கப் பெருமல், கொடியிலேயே இருக்குமானல், பசுமையான இலைகளினூடே சிவந்த பழம் இருப்பது இனிமையாக இருக்கும் என்பதனை "கனியிருந்தனைய செவ்வாய்" என்ருர். கொவ்வைக் கனி கொடியிலேயே இருப்பதனை "இருந்தனைய" என்று குறிப்பிட்டார்.

அரங்கநாதனின் கண்கள் அருளைப் பொழிந்து கொண்டு இருப்பதனல் பார்ப்போர் மனமும், கண்களும் அதனையேநாடுகின்றது. எனவேதான் முன்னடியில் "தாமரைக் கண்ணன்" என்று குறிப்பிட்டவர், மீண்டும் "கண்ணனை" என்று அனுபவித்துக் கூறினர்.

அவன் அழகினை அனுபவித்ததனல் கண்களில் மகிழ்ச்சிக் கண்ணீர் அரும்பி நின்றது. ஆனல் இவ்வானந்தக் கண்ணீர் இயற்கையாகப் பொருந்தியிருக்கும் வெம்மையினின்றும் வேறுபட்டுக் குளிர்ச்சி பொருந்தி, கவலையினல் தாரைதாரையாக வடியும் கண்ணீரினும் மாறுபட்டு ஆழ்ந்து அனுபவித்ததனல் மெல்லென அரும்பிச் சொட்டுச் சொட்டாக உதிருகின்றதனை "பனியரும்புதிருமாலோ?" என்ருர். மாலோ என்பது அசை.

கண்ணனின் அழகை மேலும் மேலும் அனுபவிக்கவிடாது, ஆனந்தக் கண்ணீர் திரையிட்டு மறைக்குமாறு முன்காலத்தில் பாவியேன் என்ன பாவம் செய்தேனே? என்று தனக்கு ஏற்பட்ட வருத்தத்தை "என் செய்தேன் பாவியேனே" என்று நொந்து கொள்கிருர்.

("மால் மருகன்")




## ஆனுயர் குழல்

[திரு. க. கலியாணம், எம்.ஏ., டிப். எக்கான்.,]

"அலைமலிந்த புனல்மங்கை ஆனுயர்க்கடியேன்''

—சுந்தரமூர்த்திசுவாமிகள்.

"தாயவன் யாவுக்குந் தாழ்சடை மேல்தனித் திங்கள் வைத்த
தூயவன் பாதந் தொடர்ந்துதொல் சீர்துளை யாற்பரவும்
வேயவன் மேல்மழ நாட்டு விரிபுனல் மங்கலக்கோன்
ஆயவன் ஆயன் என்னை உவந்தாண் டருளினனே"

—நம்பியாண்டார் நம்பிகள்.

நம் தமிழ்முன்னேர் இசைக்கருவிகளை தோல் கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்று வகைப் படுத்திக் கூறியுள்ளனர். குழல் துளைக்கருவி, யாழ் நரம்புக் கருவி. குழலும் யாழும் மிகப்பழைய இசைக்கருவிகள். சங்க இலக்கியங்களிலும், சிலப் பதிகாரத்திலும் பல இடங்களில் பயின்று வருவதைக் காணலாம். குழல் இயற்கையானது, யாழ் செயற்கையானது. குழலையும் யாழையும் முதலில் கண்டு பிடித்த பெருமை முறையே முல்லை நிலமக்களாகிய ஆயர்க்கும் குறிஞ்சி நிலமக்களாகிய வேடர்க்கும் உரியதாம் என்பது பெரும் பாணுற்றுப் படையிலிருந்து தெரிகிறது. காட்டில் உலர்ந்த மூங்கிலில் வண்டுகள் துளைத்த துளைகளின் வழியே காற்றுப்புகும் போது இன்னிசை பிறப்பதை அறிந்த இடையர்கள் மூங்கில் துண்டுகளில் தீக்கடைக் கோலால் துளையிட்டு, ஊதி, இசை எழுப்பி மகிழ்ந்தனர். வேடர்கள் விலங்குகளை வேட்டையாடுகையில் வில்லினது நாணை விரலால் தெறிக் கும் போது உண்டாகும் இன்னிசை கேட்டு யாழை அமைத்துக் கொண்டனர். செயற்கையாலான யாழைவிட இயற்கையாலமைந்த குழலே சிறந்தது—உயர்ந்தது என்பர். திருவள்ளுவரும் "குழல் இனிது யாழ் இனிது" என்றுதானே கூறியுள்ளார். சேந்தனுர் திருப்பல்லாண் டிலும் ''குழல் ஒலி, யாழ் ஒலி, கூத்து ஒலி" என்று கூறியிருப்பதையும் காணலாம். "குழலும் யாழும் அமிழ்துங்குழைத்த நின்மழலைக் கிளவி" என்பது சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகளின் வாக்கு. குழலை முதலில் ஊதியவன் முருகப்பெருமான். நக்கீரர் திருமுருகாற்றுப்படை யில் ''குழலன் கோட்டன் குறும்பல்லியத்தன்" என்று கூறியிருக்கிருர். அதன் பின்னர் குழலிசையெழுப்பி மயக்கியவன் கண்ணபிரான்.

ஈண்டு, குழலின் இலக்கணத்தைச் சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லாரின் துணை கொண்டு அறிந்து கொள்வது பொருத்த முடையதாகும். குழலுக்கு வங்கியம் என்ற பெயருமுண்டு. அதை மூங்கில், சந்தனம், கருங்காலி, செங்காலி, வெண்கலம் ஆகியவற்றால் செய்யலாம். மூங்கிலால் செய்வது உத்தமம்; வெண்கலத்தால் செய்வது மத்திமம்; மற்ற மூன்று மரங்களினாற் செய்வது அதமம். வெண்கலம் வலிது; மரங்கள் எப்பொழுதும் ஒத்தே நிற்கும். ஆனால் மூங்கிலாற் செய்யப்பெற்ற குழலின் இசை தனது மாற்றத்தாலே, வேனில், வைகறை முதலிய பெரும் பொழுது சிறுபொழுதுகளைக் காட்டும். இக் காலத்தே புல்லாங்குழல் என்ற பெயர் வழங்கி வருகிறது. உள்ளே மென்மையும், புறத்தே வன்மையுடைய புல் இனத்தைச் சார்ந்தது மூங்கில். ஆகவேதான் புல்லாங்குழல் என்ற பெயர் ஏற்பட்டது. குழல் இலக்கணம் இருவகைப்படும்-பிண்டி இலக்கணம், துளையளவு இலக் கணம். பிண்டி என்றால் துண்டு. மூங்கில் துண்டின் நீளம் இருபது விரல், சுற்றளவு நாலரைவிரல். துளையிடும்போது நெல்லரிசியில் ஒருபாதி மரம் நிறுத்திக் கடைந்து வெண்கலத்தாலே மூடி, இட முகத்தை யடைத்தும் வலமுகத்தை வெளியாகவும் விடவேண்டும்.

குழல் 20 விரல் நீளம்

அடைத்த பக்கம் | ...2... .........7........... ......... ...9............... ...2... | திறந்த பக்கம்

0     0 0 0 0 0 0 0 0

ஊது துளை    முத்திரை    மற்ற 7 துளைகள்

இருபது விரல் நீளமுள்ள மூங்கில் துண்டில், அடைத்த முகத்துக்குப் பக்கத்தில் இரண்டு விரலளவு விட்டு, ஒரு துவாரமும், பின் அதிலிருந்து ஏழு விரலளவு விட்டு, ஒன்பது விரல் அளவிற்குள் எட்டுத்துளைகளையிட வேண்டும். கடைசி திறந்த முகத்துக்குக் கருகேயும் இரண்டு விரலளவு விடவேண்டும். அடைத்த பக்கத்துக்கருகேயிருப்பது வாய்வைத்து ஊதும்துளை. எட்டுத் துளைகளில் முதலில் இருப்பது முத்திரை என்பது. அதை நீக்கி மற்ற ஏழு துளைகளிலும் ஏழு விரல்கள் பற்றி வாசிக்க வேண்டும். இடக்கையில் பெரு விரலும் சிறு விரலும் நீக்கி மூன்று விரல்களும், வலக்கையில் பெருவிரலொழிந்த நான்குவிரல்களும் ஆக ஏழு விரல்களாம். ஏழு துளைகளில் ஏழு இசை பிறக்கும். அது ஏழு எழுத்துக் களாற் பிறக்கும். அவை ச, ரி, க, ம, ப, த, நி என்பன. சட்சம், ரிடபம் காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதம் என்பர். இவற்றை அடியார்க்கு நல்லார் கூறியுள்ளாரேயன்றி, இளங்கோவடிகள் கூற வில்லை. பண்டைத் தமிழ் நூலோர் இசைப் பெயர்களைக் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்று குறிப்பிட்டிருக்கின்றனர். இசை என்றால் புகழ், இணைப்பு, ஒப்பு என்ற பல பொருள்கள் உண்டு. நம்முடைய அடியார் எல்லாரும் இசைப்பாடல்களால் இறைவனைப்

பாடினர், அவன் திருவருளுக்குப் பாத்திரமாயினர். ஆகவே இறைவன் திருவடிகளோடு இசைவிப்பதையும் இசை என்று கூறுவதும் பொருத்த மாக இருக்குமல்லவா? இவ்வாறு இசையால்—அதுவும் குழலிசையால் இறைவனைப் பரவித்திருவடியடைந்த அடியார் ஆனாய நாயனார். அவர் வரலாற்றைச் சேக்கிழார் வழி நின்று காணலாம்.

சோழ நாட்டின் ஒரு பகுதி மழநாடு என்பது. அது கீழ்மழநாடு, மேல்மழநாடு என்ற இரு பிரிவுகளுடையது. மேல் மழநாடு மிக்க நீர் வளம், நிலவளம் படைத்தது. உழத்தியர் கூந்தலிலணிந்த பூக்களில் வண்டு உறங்கும்; தாமரைப் பூவில் கயல்மீன் உறங்கும்; மாஞ்சோலையில் எருமை உறங்கும். மேல்மழநாடு மண்ணிற்கு அருங்கலமானது. அதற்கு நன்கலமாக அமைந்தது திருமங்கலம் என்ற ஊர். அவ்வூரில் ஆயர் குலத்தில் தோன்றியவர் ஆனாயர். அவர் நாள்தோறும் ஆனிரைகளை மேய்ச்சல் புலங்களுக்குக் கொண்டு சென்று, புல்மேய விட்டு, நீர் அருத்தி மீண்டுவரும் தொழில் புரிந்து வருவார். அப்படிச் செயலாற்றும் போது சிவபெருமான் திருவடிக்கு அன்பு செய்யும் கானமான குழல் வாசிப்பதை மேற் கொண்டார். எம்பெருமான் ஐந்தெழுத்தை ஏழிசையின் சுருதிபெற வாசித்து, சராசரங்களுக்கெல் லாம் இசையமுதை அளித்துவந்தார்.

இவ்வாறு ஒழுகிவரும்போது வழக்கம் போல் ஒரு நாள் ஆனாயர் புறப்பட்டார். மயிரைக்கோதி எடுத்து முடித்துக் கட்டிய குடுமி; அதன் மேல் நெருக்கமாகக் கட்டிய கொண்டை மாலை; பசுங்கொடி வடத்தில் புனைந்த முல்லையும், கயிற்றில் கோத்த பொற்காசுகளும் மயிர்ச்சுருள் புறத்தே அணிசெய்தன; காதில் செங்காந்தள் மலர் ஒளி விளங்கிற்று; நெற்றியில் திரு நீறுகவின் செய்தது; மார்பில் மாலை புரண்டது; இடுப்பில் மரவுரி, அதன் மேல் தழைகளினாலான பட்டுப்போன்ற மேலாடை பொலிந்தது; அவர் கைகளில் சிறு கோலும், வேய்ங்குழலும் இருந்தன; திருவடிகளில் தோற் செருப்புப் பிறங்கியது. ஏவலர்களான மற்ற கோவலர்களும் அவருடன் சென்றனர். பசும் புல் தரையை அடைந் தனர். அங்கு ஒரு கொன்றை மரம் நின்றது. மலர்கள் எம்பெருமான் சடை முடி போல் தொங்கிற்று. அதனைச் சிவபெருமானாகக் கண்டார்; பசு மேய்க்கப் போனதை மறந்து நின்றார்; மனம் உருகினார்; இறைவனி டம் ஒன்றிய சிந்தையுடையவரானார். பலகாலும் தேங்கிக் கிடந்த சிவக் காட்சி உள்ளடங்கமாட்டாது மடைதிறந்து இசை வெள்ளமாகப் பரந்தது. எழுத்தைந்தும் வழுத்தித் தம் குழலில் இன்னிசை எழுப் பினார். பெருந்தனித்துளையில் அதரம் வைத்து ஊதினார். முத்திரை முதலான துளைகளைச் சோதனை செய்த பின், முத்திரைக் கடுத்த ஏழு துளைகளில் ஏழிசைகளை ஆரோகண அவரோகணங்களில் அமைத்தார். குறிஞ்சிப் பண்ணில் தொடங்கி, முல்லைப் பண்ணாக்கி, கொடிப்பாலையில் நிறுத்தினார். அஞ்செழுத்தின் இசை பெருகச் செய்தார். இம்மதுர வொலி தேன் தெள்ளமுதத்துடன் கலந்து செவிவாய்ப் பாய்ந்த தென எவ்வுயிரினும் தேக்கி நின்றது. பசுக் கூட்டங்கள் புல் அருந்தி அசை

போடவில்லை; கன்றுகள் பால் உண்ண மறந்தன; எருதுகளும் மான் முதலிய விலங்குகளும் மயிர் சிலிர்த்து வந்தணைந்தன; மயில்களும் பறவை இனங்களும் உணர்வொழிந்து அருகே வந்தன; இடையர்களும் தங்கள் வேலையை மறந்தனர்; நாகலோகத்திலுள்ளவர், மலைவாழ் அரமகளிர், விஞ்சையர், சாரணர், கின்னரர், அமரர் முதலியோரும் வந்து ஈண்டினர்; தேவமகளிரும் விரைந்து வந்தனர்; பகையுடைய மயில் மேல் பாம்பு மருண்டு விழுந்தது; யானையும் சிங்கமும் ஒன்ருய் இணைந்தன; புலியும் மானும் கலந்து வந்தன; காற்று அசையவில்லை; மரக்கிளைகள் ஆடவில்லை; மலையருவிகளும் காட்டாறுகளும் சத்தமிட்டு ஓடவில்லை; மேகங்கள் முழங்கவில்லை; கடல் அலைகள் துளும்பவில்லை; இவ்வாறு அசையும் பொருள்களும் அசையாப் பொருள்களும் குழலிசை மயக்கத்தால் ஒன்ருயின. இத்துடனே நின்று விடவில்லை. ஆனுயர் ஐந்தெழுத்தை உள்ளுறை பொருளாக அமைத்துப் பாடியதால் எல்லாவற்றையும் கடந்து அப்பாலாய்ச் சென்றது. எங்கு சென்றது? சேக்கிழார் பெருமான் திருவாக்கால் தெரிந்து கொள்ளலாம்.

“ மெய்யன்பர் மனத்தன்பின் விளைந்த இசைக்குழலோசை
வையம் தன்னையும் நிறைத்து வானம் தன் வயமாக்கிப்
பொய்யன்புக் கெட்டாத பொற்பொதுவில் நடம்புரியும்
ஐயன்றன் திருச்செவியின் அருகணையப் பெருகியதால்.”

குழலோசை கேட்ட இறைவன் தேவியுடன் எழுந்தருளி ஆனுயருக்குக் காட்சி நல்கினர். “எப்போதும் நாம் குழலிசை கேட்க இதே நிலையில் நம் பக்கம் சேர்வாய்” என்று இறைவன் அருள் பாலித்தார். ஆனுய நாயனுரும் குழலிசைத்துக் கொண்டே உடன் செல்ல, பெருமானும் பொன்னம்பலத்துள் புகுந்தருளினர்.

எத்தொழிலைச் செய்து கொண்டிருந்தாலும் இறைவனிடம் பேரன்பு செலுத்தி அவன் பேரருளுக்குப் பாத்திரமாகலாம் என்பதும், இசைக்கு உருகாத எப்பொருளும் இல்லையென்பதும், ஆனுயர் ஐந்தெழுத்தை உள்ளுறை பொருளாகக் கொண்டது போல் பொருள் பொதிந்த பாடல்களே பயனுடையது என்பதும் இவ்வரலாற்ருல் நாம் தெரிந்து கொள்ளும் சிறந்த உண்மைகளாகும்.

ஆனுயநாயனுர் அடியிணை போற்றி.

---

மதமாற்றக் கொடுமைகளை—நஞ்சனைய நாத்திகவாதத்தை—வன்முறைசார்ந்த கொடிய சித்தாந்தங்களை வாளா எதிர்ப்பதனுல்மட்டும் அவை மாரு. இக்குறைகள் தோன்றியதற்குரிய காரணங்களை ஆராய்ந்து, அக்காரணங்களையே மாற்றவேண்டும்.

—தவத்திரு. குன்றக்குடி அடிகளார்.




## முதலாழ்வார் மூவர்

[வித்துவான் திரு. கா. அ. மணவாளன், பி.ஏ., பி.ஓ.எல்.,]

தெண்ணீர் வயல் தொண்டை நன்னாடு சான்றோருடைத்து என்று ஔவையார் பாடியபடி, கல்வி கேள்வி அறிவு ஒழுக்கங்களால் சிறந்த சான்றோர்கள் தோன்றிய தொண்டை நாட்டிலே காஞ்சிபுரம் என்னும் பட்டினம் பண்டைக்கால முதலே பெருமை வாய்ந்த பட்டினமாகும். 'முக்தி தரும் நகரேழுள் முக்கியமாம் கச்சி' என்று போற்றப்பட்ட அக் காஞ்சிபுரத்தில் திருவெஃகா எனும் திருமால் திருப்பதியொன்றுண்டு. அத்திருவெஃகாவிலுள்ள அழகிய பொய்கையில் பூத்ததான, தாமரை மலரில் ஐப்பசி மாதத்துத் திருவோண நட்சத்திரத்தில் திருச்சங்கின் அமிசமாய்ப் பொய்கையாழ்வார், சரவணப் பொய்கையில் தோன்றிய சண்முகக் குமரன்போலே அவதரித்தார். பொய்கையில் அவதரித்தது காரணமாகப் பொய்கையாழ்வார் என்று பெயர் பெற்றார்.

இவரைப் போலவே தொண்டை நாட்டின் மற்றொரு பழம்பதியான "கலங்களியங்கும் மல்லைக் கடல் மல்லைத் தலைசயனம்" என்று போற்றப் படும் திருக்கடன்மல்லையில் (மகாபலிபுரத்தில்) ஐப்பசி அவிட்ட நட்சத் திரத்தில் குருக்கத்தி மலரில் திருமாலின் ஐந்து ஆயுதங்களில் ஒன்றான கதையின் அமிசமாய் பூதத்தாழ்வார் அவதரித்தார். இறைவன் இட்ட வழக்காய் இருந்தமையால் இப்பெயர் பெற்றார் என்று பெரியோர் கூறுவர். மூன்றாமவரான பேயாழ்வார் "தேனமர்சோலை மாடமாமயிலை" என்றும் "ஒப்பவரில்லா மாதர்கள் வாழும் மாடமாமயிலை" என்றும் போற்றப்படுவதான திருமயிலை என்னும் திவ்விய தேசத்தில் கேசவன்–மாதவன் என்ற திருப்பெயர்களைத் தாங்கி நிற்கும் எம்பெருமான் களுடைய கோவில்களுக்கு இடையிலிருக்கும் திருக்கிணற்றிலே தோன்றிய செவ்வல்லி மலரில், ஐப்பசி மாதத்துச் சதய நட்சத்திரத் திலே, திருமாலின் நாந்தகம் என்னும் வாட்படையின் அமிசமாய்த் தோன்றினார்.

இவ்விதம் உலகியலுக்கு மாறாகப் பூவிலும், பொய்கையிலும் தோன்றிய இவர்கள் மற்ற மனிதர்களைப் போலன்றி, எப்பொழுதும் பக்தி மேலீட்டால் இறைவனருள் பெற்றுப் பரம் பொருளான அத்திரு நாராயணன் திருவடிகளையே தஞ்சமாகக் கொண்டுவாழ்ந்தனர். இம் மூவரிலும் மூன்றாமவரான பேயாழ்வார் கடவுள் பக்தியால் எப்பொழுதும் ஆடிப்பாடி, அழுதுதொழுது, காண்பவர் பேய்பிடித்தவர் என்று சொல்லும்படி வாழ்ந்ததால் பேயாழ்வார் என்று பெயர் பெற்றார் என்பர்.

இம்மூவரும் "உண்டியே உடையே உகந்தோடும் இம்மண்டலத்தோடும் கூடுவதில்லையான்" என்கிறபடியே மிகவும் விரக்தர்களாய் ஒரு நாள் தங்கின இடத்தில் மற்றொருநாள் தங்காமலும், ஒருவரையொருவர் அறியாமலும் திருமால் திருப்பதிகள் தோறும் சென்று வழிபட்டு வரலாயினர். இவ்விதம் தனித்தனியே வழிபட்டுவரும் இம்மூவருள், பொய்கையாழ்வார் ஒருசமயம் நடுநாட்டிலுள்ள திருக்கோவலூரை அடைந்தார். அன்றிரவு பெருமாளைச் சேவித்து வீதி வழியே வரும் போது பெருமழை உண்டாயிற்று. அம்மழைக்கு ஒதுங்க இடம் தேடின பொய்கையாழ்வார் அருகிலிருந்த ஒரு வைணவர் திருமாளிகைக்குச் சென்று இடம் வேண்டி நின்றார். அவ்வந்தணர் சம்மதிக்கவே ஆழ்வாரும் அவ்வீட்டு இடைகழியில் படுத்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் பூதத்தாழ்வாரும் அங்கே வந்து முன்னவரைப் போலவே தங்குவதற்கு இடம் கேட்டார். அப்பொழுது அவ்வீட்டுக்குரியவர், ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம் என்று பதிலளித்தார். அதன்படியே அங்கு இருக்கை கிடைத்த மகிழ்ச்சியிலே பூதத்தாழ்வாரும் அங்கு முன்னமே தங்கியிருக்கும் பொய்கையாழ்வாருடன் கலந்து உறவாடி திருமால் பெருமைகளைப் பேசிப் போதுபோக்கும்போது, மூன்றாமவரான பேயாழ்வாரும் இறைவனருளால் அங்கு வந்து சேர்ந்தார். அப்போதும் அவ்வீட்டுக்குரியவர் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம் என்று கூறினர். இவ்விதம் முதலாழ்வார்களாகிய மூவரும் நின்று கொண்டே இரவு முழுவதும் "ஒரு குறளாய், இரு நிலம், மூவடி மண்வேண்டி, உலகுண்டபெருவாயனை", உலகளந்த பெருமாளின் குணங்களைப் போற்றி வாழ்த்திவரும் நேரத்தில் அவர்கள் நிற்கின்ற இடம் போதாமல், மேலும் நெருக்குண்டு தவிக்கும்படி வேறொருவர் வந்து சேர்ந்தார். அவ்விதம் அங்கு வந்து நெருக்கடியை உண்டு பண்ணினவர் யார் என்று அறியாமல் அம்மூவரும் தவித்தனர்.

அப்பொழுது பொய்கையாழ்வார் பூமியாகிய தகழியில் கடல் நீரையே நெய்யாகக் கொண்டு சூரியனை விளக்காக ஏற்றினர். உடனே பூதத்தாழ்வார் அன்பாகிய தகழியில் ஆர்வத்தை நெய்யாகவும், சிந்தையைத் திரியாகவும் கொண்டு ஞானச் சுடர் விளக்கை ஏற்றினர். இப்படி இந்த இரண்டு ஆழ்வார்களாலும் ஏற்றப்பட்ட விளக்கொளிகளாலே இருள் நீங்கியது. உடனே பேயாழ்வார் "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று தொடங்கித் தாம் பெருமாளைக் க்ண்டமை கூறவே மற்றவர்களும் அவரைப்பின்பற்றி அப்பெருமானின் திருவருளாலே அவருடைய திருமேனியின் அழகையும் குணங்களின் பெருமையையும் அனுபவித்து அந்தமிழ்ப்பாக்களைப் பாடினர்கள். அவர்களுள் முதலாவதாகப் பொய்கையாழ்வார்,

வையந் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச்--செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே யென்று

என்று தொடங்கி நூறுபாடல்களை முதல் திருவந்தாதி என்னும் பெயரில் பாடினார். பூதத்தாழ்வார்,

அன்பே தகளியா வார்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா— நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்

என்று தொடங்கி நூறு பாடல்களைப் பாடியருளினார். அதற்கு இரண்டாம் திருவந்தாதி என்று பெயர் வழங்கலாயிற்று.

மூன்றாமவரான பேயாழ்வார்,

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்க னணிநிறமுங் கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கங் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பா லின்று

என்று தொடங்கி நூறுபாடல்களை அருளிச்செய்தார். இதற்கு மூன்றாம் திருவந்தாதி என்னும் பெயர் அமையலாயிற்று.

இவ்விதம் இம்மூன்று ஆழ்வார்களும் ஞானத்தமிழ்ப் பாமாலைகளை அருளிச்செய்து உலகை வாழ்வித்தனர். இவர்களுடைய அருளிச் செயல்கள் தான், நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் முதன் முறையாகக் கருதப்படும் பாடல்கள். இவ்வாழ்வார்கள் திருமால் சமயத்தைச் சார்ந்து, திருமால் பரத்துவத்தை ஏற்றிப் போற்றுபவர்களாக விளங்கினாலும் வேறு சமயங்களையும், சமயக் கடவுளர்களையும் சமரசபாவத்தில் வைத்துப் பாடிய பெருமை பெற்றவர்களாவர். சான்றாகத் திருப்பதித் திருமலைமேல் கோயில் கொண்டிருக்கும் திருவேங்கடவனைப்பற்றிப் பாடும் பொழுது அரி, அரன் கோலத்தில் இரண்டு உருவையும் இணைத்துப் போற்றிய பேயாழ்வார் பாடலைக் கூறலாம்.

தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவிபாயும் திருமலைமே லெந்தைக்கு
இரண்டு ருவுமொன் றாயிசைந்து.

இப்பாடலில் சடையும், முடியும், மழுவும், சக்கரமும், அரவும், பொன்னாணும் என்று இருவேறு மூர்த்திகளுடையவும் அடையாளங்களை இணைத்து இரண்டுருவமும் ஒன்றாயிசைந்த அழகை எடுத்துக் காட்டியிருக்கும் திறம் வியந்து பாராட்டுதற்குரியதன்றோ!

இம்மூவரும், மற்ற ஆழ்வார்களுக்கெல்லாம் முன்னே அவதரித்த காரணத்தாலும்-முதன் முதலில் திருவந்தாதிப் பிரபந்தங்களை இயற்றியருளின காரணத்தாலும் முதலாழ்வார்கள் என்று பெயர் பெற்றனர்.

மற்றுள்ள வாழ்வார்க ளுக்குமுன்னே வந்துதித்து
நற்றமிழால் நூல்செய்து நாட்டையுய்த்த—பெற்றிமையோர்
என்றுமுத லாழ்வார்க ளென்னும் பெயரிவர்க்கு
நின்றதுல கத்தே நிகழ்ந்து

என்ற பொய்யில்லாத மணவாள மாமுனிவன் திருவாக்கு இங்கு நினைவில் கொள்ளத் தக்கதாம்.

# உரைகல்......

விடி வெள்ளி.........

நாத்திக ஒலி பரவி வரும் நம்தமிழகத்தில், விடிவெள்ளியென அருள் சுரக்க, தாங்கள் வெளியிடும் "அருளோசை" இச்சகமெங்கும் நிறைந்து ஒலிக்க அருட்பெருஞ்சோதி ஆண்டவரை இறைஞ்சுகிறேன்.

—சே. கு. முத்தையா, "காந்தியில்லம்" நங்கவள்ளி.

வாழி, வாழி!

மதியூட்டி, நெறிகாட்டி, மாந்தர் வாழ, நல்
மணமூட்டும் "அருளோசை" வாழி, வாழி!

டாக்டர்—சிங்கை மணிமாறன், சிக்னல் ரெஜிமெண்ட்,
மே/பா 56எ. பி.ஓ.,

[18-10-72 அன்று பிறந்த நாள் கொண்டாடும் அன்பர் சிங்கை மணிமாறன் அவர்களுக்கு நல்வாழ்த்துகள்—ஆசிரியர்.]

பெருந்துணை.

சமயத்துறை பற்றிய கருத்துகளை அறிந்து கொள்ளப் பெரிதும் துணைபுரியும் "அருளோசை" பெரிதும் வளர்க.

—புலவர் கு. கலியமூர்த்தி, மல்லசமுத்திரம்.

வெண்பா.

கவிஞர்களுக்கென்று வெண்பாப் போட்டி வைத்தல் நலம்.

—புலவர் மு. சு. தங்கவேலன், புதூர், வாணியம்பாடி.

மயக்கம்......

நும் அருளோசை இதழைச் சிறுவரே படித்துணரற் பாலார்; அவர்கள் நும்தமிழால் மயக்க முறினும் எம்மொத்தார் தெளிவுறுத்துவர்

—சோமசுந்தரம், இராணிப்பேட்டை.

வினாவிடை

பரிசு பெற்றவர்களின், தகுதியான சிறந்த விடைகளை அடுத்து வருகின்ற இதழில் தயவு செய்து வெளியிடவும்.

—ந. சுந்தரேசன், திருப்பாதிரிப்புலியூர்.

[இடமின்மை காரணமாக வெளியிட இயலாது—ஆசிரியர்]

உண்மை இந்து

தங்கள் இதழ் மூலம், நமது மதத்தின் தன்மையை தெளிவாகத் தெரிந்து ஓர் உண்மை இந்துவாக மாறினேன்.

—வி. இராமகிருஷ்ணன், மணமேடு.

### இனிய தமிழ்

சமய உண்மைகளை இனிய தமிழில் எடுத்துரைப்பதைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

—புலவர் சி. சு அனந்தராமன், குள்ளமுடையானூர்.

### செக்குமாடு

செக்குமாடுகளாக உழல்கின்றவர்கட்குப் பெரும்பயனையும் மன அமைதியையும் தருகின்றது.

—சு. அரங்கநாதன், சேலம்-1.

### கருவூலம்

"அருளோசை" ஓர் அருமையான இந்து சமயக் கருவூலம்,

—ஐ. இராமசாமி, தெற்குக் குண்டல்.

### பெருந் தொண்டு

அருளோசை இதழை என் வகுப்பு மாணவர்களிடம் கொடுத்து தங்கள் வினாக்களுக்குரிய விடைகளை அவர்களையே கண்டு பிடிக்கச் செய்ய எண்ணியுள்ளேன்.

—அ. கதிரவன், இடைநிலை ஆசிரியர், பொன்னேரி.

### பிறந்தநாள் பரிசு

அருளோசை சந்தாதாரர்கள், தங்கள் பிறந்த நாள், புத்தாண்டு பொங்கல், தீபாவளி, போன்ற நாட்களில் தங்கள் பரிசாக நண்பர் களுக்கு "அருளோசை" இதழின் சந்தாவைச் செலுத்தி, கொண்டாட லாம்.

—எஸ். முத்து சுப்பிரமணியம், பி.இ., எம்.எஸ். ஸி. சென்னை.

[இந்த அன்பரின் ஆலோசனையைச் செயல்முறைப்படுத்த "அருளோசை" அன்பர்கள் பெருமளவில் முன் வருவார்களென்று நம்புகிறோம்—ஆசிரியர்].

### நாட்டின் செல்வம்

"இக்கால உலகிற்கு ஆராய்ச்சி இன்றியமையாதது. அவ்வாராய்ச்சிக்குரிய பலதிறக் கல்வித்துறைகளைப் பயிலும் பருவம் எது? மாணாக்கர்களின் சீரிய செம்மைப் பருவம் என்று சொல்லலும் வேண்டுமோ? வருங்கால உலகுக்குரிய ஆக்கங்களைத் தம்மாட்டு மாணுற ஆக்கும் முயற்சியில் தலைப் பட்டுள்ளோர் மாணாக்கர் ஆவர் என்று சுருங்கச் சொல்லலாம். இப்பருவமுடைய மாணாக்கர்களல்லவோ நாட்டின் செல்வம்"

—திரு.வி.க.

வடபழனி ஆண்டவர்.



## கந்தர் அலங்காரம்

விழிக்குத்துணை திருமென்மலர்ப் பாதங்கள் ; மெய்ம்மை குன்ரு
மொழிக்குத்துணை முருகா என்னும் நாமங்கள் ; முன்பு செய்த
பழிக்குத்துணை அவன் பன்னிரு தோளும் ; பயந்த தனி
வழிக்குத்துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே !

—அருணகிரிநாதர்.

Edited, Printed at Peravai Achakam and Published by A. Narayanaswamy B. A.,
for the Tamil Nadu Deivika Peravai at No. 9. Maharaja Surya Rao Road,
Alwarpet, Madras-18.